தளர்ந்துவருந்துமமையத்துத்தனிவானிடையேயொருவாக்குக்
கிளர்ந்தசமியின்பச்சிலையாற்கேடிலாதவிநாயகர்க்கு
வளர்த்தவுழுவலாற்பூசைவகுத்துப்புரிமினெனக்கேட்ட
வுளர்ந்துசுரும்புநறவருந்தாவொலியற்குழலாரதுபுரிந்தார். (௧௪)

சின்னூட்சமிபத்திரங்கொண்டுதிருத்தாண்மலரிற்பூசிப்ப
வென்னுணவத்தின்குறும்பெறிந்தவிறைவன்பெருச்சாளியைக்கடவி
முன்னூயெதிர்நின்றடித்தலத்தின்முடிசாய்த்திறைஞ்சுமகளிருக்குத்
தன்னுதரவின்வரமுதவிச்சலமாம்வடிவுஞ்சுரர்க்கொழித்தார். (௧௫)

வரங்கள்கொடுத்துவிநாயகனூர்மறைந்தபின்புவானவர்க
ளிரங்குங்களிவண்டேளர்ந்துழக்குமிரைமந்தாரத்தருநிழலிற்
றிரங்கவரும்பல்விடர்களையுந்தேவனுருவந்தாபித்துக்
குரங்குமினர்ச்சாகையின்வன்னிக்குளிர்மென்றளிராலருச்சித்தார். (௧௬)

முந்தைமறையின்பலதுதிகண்மொழிந்துதாங்கள்பூசித்த
வெந்தைபெருமாற்கேரம்பனெனும்பேர்நாட்டிவானவர்க
டந்தமுலகம்புக்கிருந்தார்தவளக்களிற்றுப்பெரும்பாக
னந்தவுலகின்மந்தாரத்தடியுமிருத்திப்பூசித்தான். (௧௭)

தத்தமனையின்மந்தாரந்தழையவளர்த்தாங்கதனிழலின்
மத்தமதமால்களிற்றுமுகவரதனுருவந்தாபித்துப்
பொத்துமுளத்தன்பாலேனைப்புலவோர்பலரும்பூசித்தார்
பத்தியொடும்பன்னிரண்டாண்டுபரமேட்டியும்பூசனைபுரிந்தான். (௧௮)

நறைபில்கிணர்மந்தாரத்தினூட்டிச்சமியாற்பூசித்த
விறைவனருளாற்றன்மனைவியென்னுஞ்சாவித்திரியுள்ளக்
குறையைநிரப்பியுடன்கொண்டுகோதிலாதபெருவேள்வி
நிறையவியற்றிக்களிகூர்ந்துநீடுந்தனதுபதியடுத்தான். (௧௯)

பாலைநிகர்த்தமொழியாயிப்பரிசாஞ்சமியின்பெருமைபல
நூலையறிந்தமாதவர்களுவலுந்தோறுமிகவளருங்
காலையெழுந்துபுலையர்களுங்காணினதனைமறுபிறப்பின்
வேலையனையபாதகமும்விட்டிமறையோர்குலத்துதிப்பார். (௨௦)

மறையோர்காணின்வேதாந்தவாய்மைப்பொருளைமிகத்தெளிவர்
முறையாள்வேந்தரெதிர்காணின்முற்றுமுலகநாட்படுப்பர்
நிறையார்வணிகர்தாங்காணினிறைந்தசெல்வக்கடற்குளிப்பர்
கறைதீர்நாலாம்வருணத்தோர்காணின்மேலாங்கதியடைவர். (௨௧)

வன்னித்தளிராணியின்னும்வரதனடியினருச்சனைசெய்
துன்னிச்சிறந்தவிழைவனைத்துமுறுவாயென்றுகிருச்சமதன்
பன்னிப்பிரியுமமையத்திற்பரிவான்மீட்டுமெதிர்வணங்கிக்
கன்னிக்கடவுட்கற்புடையகாமர்கீர்த்தியிதுசொன்னாள். (௨௨)

அடியேன்சிறுவனிவற்கிடையூறடரா திருப்பவெவ்வுலகுங்
கடியாதேவல்புரிகிற்பக்கணேசர்திருமந்திரமொன்றை
யொடியாக்கருணைமாதவத்தோயுரைத்தற்கெளிதாப்பயன்விளைவிற்
றொடியார்கரத்தினருளுவதாச்சொல்லவேண்டுமெனவிரந்தாள். (உ௩)

மதுரப்புனலினினிதாடிமைந்தன்வருமாபுரிந்தவற்குச்
சதுரக்கரத்தைமொழிந்துமுறைதனையுங்கிளந்துகிருச்சமதன்
கதுவப்பவர்தீரவிமுத்தக்காமர்தலத்தின்வீற்றிருந்த
விதுவைச்சடைவைத்தருடுண்டிவிமலர்ப்பணிந்தெண்ணுகவென்றான். ()

அருளுந்துண்டிவிநாயகனூரமர்ந்தகாசித்தனிநகரின்
பெருமையருளவேண்டுமெனப்பெயர்த்துங்கேர்த்திவணங்கின
ளொருவிப்பொறியைந்தையுந்தவமேயுஞற்றுங்கிருச்சமதனவட்குப்
பொருவிலந்நகர்ப்பெருமைபொற்பத்தொகுத்துத்தெருட்டுவான். (உ௫)

தேவர்கள்சாபந்தீர்த்தபடலமுற்றியது.

ஆக படலம். ௬௬-க்கு திருவிருத்தம் உ௬௬௫

---

# கிப்பிரப்பிரசாதனன்வரம்பெறுபடலம்.

பிறப்புகான்கவற்றெழுவகைத்தோற்றமப்பேதத்
திறப்பவெண்பத்துநான்குநூறாயிரமென்ன
விறக்கும்யோனிபேதங்களன்னவற்றுண்மெல்லியலாய்
சிறப்பமானிடப்பிறவியிற்சிவணுதலரிதே. (௧)

செப்புமானிடமாய்த்திகழ்கின்றபல்பவத்து
ளொப்பிலாதநால்வருணத்திலுதித்திடலரிதே
யப்புநால்வருணத்துளும்பனவராய்ப்பிறத்த
றுப்புநேரிதழ்த்தாமணிமுறுவலாயரிதே. (உ)

அந்தணாளர்கடம்முளுமறிவுடையவராய்
வந்துதோன்றுதலரிதுவாலறிவுடையவருட்
டந்தபாசங்கணீத்திடும்பரமஞானத்தா
லெந்தையாதத்திலிணங்குனராகுவதரிதே. (௩)

இன்னவாறுதித்துயரியல்பாளரோயன்றிச்
சொன்னயோனிகளனைத்துநோயாளர்துன்மதியான்
மன்னுதீநெறிநடப்பவருறுப்பிலார்மற்று
நன்னர்வீடுறவிச்சுவநாதனூர்நாடி. (௪)

அனந்தமூர்த்தியாய்த்தீர்த்தமாயளவிலாத்தலமா
யனந்தனேனந்தியவுலகெலாமமர்ந்தனர்தாமே
யனந்தமாமவைமூவகையுளுமரும்பயனென்
றனந்தமாகவோர்மூர்த்திதீர்த்தந்தலமானுர். (ரு)

சிறந்தமூன்றுமாவனதிகழ்விச்சுவலிங்கம்
வறந்திடாமணிகன்னிகையவிமுத்தமென்னப்
பிறந்தநானிலத்தவரொலாம்பேசிடப்படுவ
மறந்தவாதவேன்மருட்டியமதர்நெடுவிழியாய். (சு)

அந்தவிச்சுவலிங்கனையயனரியரனும்
வந்துபத்தியிற்பூசித்துவணங்கியெவ்வுலகுந்
தந்திடுந்தொழிலளித்திடல்சங்கரித்திடுத
லெந்தமுந்தொழிலொடுவரம்யாவையும்பெற்றுர். (எ)

இந்திரன்முதலெண்மருமேனைவானவரும்
வெந்திறந்துவல்லரக்கரும்வெய்யதானவருஞ்
சுந்தரச்சுடிகையின்மணியுரகருந்தொழுது
தந்தமக்குறுபதங்களிற்சார்ந்தனர்மேனுள். (அ)

அன்னலாகியவிச்சுவநாதனையடுத்தங்
கெண்ணின்மாதவமுன்னொருகாலத்தியற்றி
நண்ணுமாதவனம்பிரான்றிருமுடியாட்டத்
தண்ணெனீர்படுதடாகமொன்றகழ்ந்துறச்சமைத்தான். (கூ)

உரகர்பாதலமளவுமாழ்ந்தொளிருமத்தடாகம்
விரவுதீர்த்தத்தின்விச்சுவநாதனையாட்டிப்
பரவிநாரணனத்தடங்கோட்டினிற்பயின்று
கரவிலாதமாதவம்புரிந்திருக்குங்காலத்தில். (க0)

மாயைவென்றவர்மனத்திடைமாறியேநடிக்கும்
வேயைவென்றதோட்குவிமுலைவிமலைதன்னொடுமால்
சேயைவென்றவன்சேவின்மேற்றிகழ்ந்தலர்பூவை
வீயைவென்றவற்கருளியவிண்ணிடைநின்றுன். (கக)

செம்மலாரொதிர்நின்றமைதெரிந்துளநெகிழ
விம்முவால்வளைக்கையினுன்வெய்தெழுந்தொன்றுந்
தம்மைநேர்வருந்தாட்டுணைத்தலத்திடைவீழ்ந்து
சும்மைமாமறைதுதித்தனன்சோனைமாமழைபோல். (கஉ)

உழுவலன்பையுந்தவத்தையுமொருங்குறநோக்கித்
தழுவுதண்ணருட்டலைவனூர்சடைமுடியசைத்தார்
வழுவில்செஞ்செவியுரககுண்டலத்தொளிர்மணிவிட்
டழுவமென்புனற்றடாகத்தின்விழுந்தமூழ்ந்தியதே. (கங)

ஆதலான்மணிகன்னிகையெனும்பெயரதற்காங்
கீதிலாதவத்தீர்த்தம்பின்பகிரதன்றேர்ப்பின்
போதுவான்பெருங்கங்கைபாய்ந்தேகமாய்ப்புவனத்
தேதநீத்திடும்பகிரதியெனவிலகியதே. (கச)

அழுந்துபட்டவத்தீர்த்தத்தினமர்பலவுயிருங்
கொழுந்துபட்டமென்கொடிகளுந்தருக்களுமதனில்
விழுந்துபட்டவென்புடையபல்லுயிர்களும்விரிநீ
ரெழுந்துபட்டவெவ்வுயிர்களுமிருங்கதியடையும். (கரு)

எங்குமாகியவிறைவனீங்காதமர்தலினு
லங்குவானவர்முனிவரரமர்ந்திருக்கின்றார்
திங்கள்சூடிநேர்தெய்வதங்கங்கைநேர்தீர்த்தந்
தங்குகாசிநேர்தலங்களுமில்லைநாழ்குழலாய். (கசு)

சாற்றுகாசியில்விச்சுவநாதர்சந்நிதியிற்
றேற்றிநின்றருடுண்டிவிநாயகர்மலர்த்தாள்
போற்றிவானவர்வன்னிமந்தாரம்புல்லறுகு
மேற்றிநீண்முடிப்பன்முறைவரங்கள்பெற்றிருந்தார். (கஎ)

இந்தநல்விதியாசமுன்னேந்திலைவேலான்
விந்தவெற்படக்கியமுனிகேட்டிடவிரித்தான்
பிந்தைநாரணன்காசிபற்குரைத்தனன்பெண்ணே
சிந்தைதூயைநீயாதலிற்செப்பினானினக்கே. (கஅ)

ஆங்கடுத்துமந்தாரத்தாலறுகினாற்சமியாற்
றூங்குநீள்கரத்துண்டிவிநாயகன்பதத்தி
லோங்குபூசனைபுரிந்துநாலெழுத்தையுமுரைத்துத்
தாங்கிநல்வரஞ்செல்கெனச்சாற்றினன்போனான். (க௯)

அப்பெருந்தவனகறலுமகமகிழ்கீர்த்தி
யிப்பிரப்பிரசாதனனெடுங்கிளரன்பின்
முப்புரம்பொடிபடுத்தவன்முதுநகர்க்காசி
வைப்பினிற்புகுந்திளைக்குமந்தாகினியாடி. (உ௦)

நன்றுதுண்டிவிநாயகனற்பதம்வணங்கி
யன்றுபட்டினியாய்த்துயினீத்தங்குச்சிலநாண்
மன்றவைகுழிமாசிமாமதியிற்பின்பக்க
மொன்றங்காரகசதுர்த்தியாமொருதினமடுப்ப. (உக)

தூயவத்தினங்காலையிற்சூழ்கடன்முடித்துப்
பாயவன்னிமென்னிழலிருந்தருண்மனுப்பகர்ந்து
மேயசந்திரவுதையத்தின்விநாயகபூசை
யாயவன்னையோடாற்றினனரசிளங்குமரன். (உஉ)

தூர்வைவன்னிமந்தாரமுந்துகளில்பல்பொருளு
நார்வளர்ந்திடுமுளத்தொடுநன்குறவீட்டிச்
சீர்வளர்ந்திடுபூசனைசெய்துமுற்றியபி
னேர்வளர்ந்திடுதியானஞ்செய்திருந்திடுமெல்லில். (௨௩)

சிங்கவூர்தியிற்றேசுமிழ்திருமுகமைந்துந்
துங்கமாகியவைவயிருபுயங்களுந்துலங்க
வெங்கணுயகனெதிருறத்தோன்றினனெழுந்து
தங்குசீர்த்திதன்மகனெடுஞ்சார்ந்திதுசாற்றும். (௨௪)

தேவர்நாயகதுன்னடிவிநாயகதிகழ்ந்த
மூவர்நாயகமுதலிலாமுதல்வநின்காட்சி
மேவலாலடியேங்களேவிழுத்தவமுடையேம்
பாவம்யாவையுநீங்கினம்பயனெலாம்பெற்றேம். (௨௫)

நினதுபேரருட்டிறத்திஞனிலேபெறவுதித்த
வெனதுகான்முளையாகியவிவனுக்கென்மாற்று
டனதுசூட்சியாலூட்டியதமூல்விடமுனிவ
னுனதுபேரருளாலொழித்துயிரினைக்கொடுத்தான். (௨௬)

எற்றைஞான்றுமிவ்விளவலோரிடருமெய்நாமன்
முற்றுமாயுளுங்கல்வியுஞ்செல்வமுமுதன்மை
பற்றுமேன்மையும்பகைக்குலமேவல்செய்பரிசுந்
துற்றுபோகமுந்துவன்றிவாழ்வரந்தருகென்றாள். (௨௭)

துள்விநாயகராயிரம்வருடமன்னணிருந்து
வேள்வியாயிரம்புரிந்துநீவேண்டியவரமுந்
தாள்விடாதுபெற்றனந்தத்திற்றத்தவஞானங்
கேள்வியாலவனமையடைவானெனக்கிளந்து. (௨௮)

அரசர்தானவர்வானவர்வெருள்பரசளித்துப்
பரசுபாணியென்றொருபெயர்சிறுவர்க்குப்பகர்ந்து
கரசரோருகத்தங்குசங்கலந்தருணுதன்
விரசுமூர்த்தியின்முன்புபோன்மேவிவீற்றிருந்தான். (௨௯)

மைந்தனோடுபின்கீர்த்திவைகறைப்பொழுதெழுந்து
கந்தமென்மலர்க்கங்கைநீர்களிப்புறத்தோய்ந்து
முந்துதுண்டிவிநாயகன்முளரிமெல்லடியிற்
சிந்தையன்பொடுபூசனைமறுவலுஞ்செய்தாள். (௩0)

விடைபெற்றந்நகர்க்காசியையரிதுவிட்டேகி
யடையும்பல்வகைக்கானமாருநெறிநீந்தி
யுடையதன்னுயிர்நாயகனுறைதன்னபுரியின்
புடையடுத்தனள்பொருவிலாப்புத்திரனோடு. (௩௧)

முழவுகண்படாக்கடைத்தலைமன்னன்முன்னறிந்து
மழவிளங்களிறனையநன்மகனொடுங்கீர்த்தி
விழவுமல்கவிற்கரிடைமேவுமாபுரிசென்
றழகுமல்கியவமைச்சராதியர்தமைவிடுத்தான். (௬௨)

தனைசெய்புண்ணியப்பயனிங்குச்சார்ந்ததென்றவர்கள்
வினைசெய்பூமணியாதியால்வீதிகள்புனைய
வுனைசெய்தெண்ணில்பல்வரிசையினொடுமெதிர்கொள்ளப்
புனைசைமால்கரிச்சிவிகையூர்ந்திருவரும்போந்து (௬௩)

கனகமாளிகைக்கோயிலையடுத்தனர்களிப்பி
னனகனாகியவரசனையடிமலர்பணிந்தார்
வனசநேர்கையின்மைந்தனைத்தழீஇக்கொடுமன்னன்
வினவினானுறுகிர்த்தியைவிளைந்தனமுழுதும். (௬௪)

அளவளாவியங்கனைவருமுடங்குவாழ்ந்தமர்நாள்
விளரிலாதவேன்மன்னவன்விளங்குதன்மகன்றாள்
வளநிலாவியநிலப்பொறைநிறீஇவனத்திடைப்புக்
குளமெலாம்பரிசுத்தமாமுறுதவம்புரிந்தான். (௬௫)

சவிநிரப்புநன்மணியினாற்கனகசனைச்சமைத்துச்
செவிநிரப்பியகேள்வியான்றிகழ்களத்தணிந்திட்
டவிநிரப்புறும்வேள்வியாயிரம்புரிந்தொரிகள்
புவிநிரப்பியாண்டாயிரம்பொற்பவாழ்ந்திருந்தான். (௬௬)

இறுதிமேவலுமேரம்பன்றிருவருட்டிறத்தான்
மறுவிலாதபொன்விமானம்வந்திடவதினிவர்ந்தங்
குறுவிநாயகனுலகமுற்றனேககற்பங்கள்
முறுகுபோகத்தின்மூழ்கிமுத்தியுமடைந்தனனால். (௬௭)

வன்னியைங்கரற்குரிமையானதுமதன்வரமும்
பன்னினுமலைமாதராய்பரவுறுங்கணேசன்
றன்னொடெம்மைநீவேறெனச்சற்றினிநினைய
லன்னவற்குரித்தாமதுநாமுமேலணிந்தாம். (௬௮)

மறைவலாளர்சாயுச்சியமன்னர்சாரூப
முறையுநாய்கர்சாமீபமொண்சூத்திரர்வளங்க
ணிறையநின்றசாலோகமுநீடுறவடைவா
ரனரயும்வன்னியாலருச்சனையாற்றினொரணங்கே. (௬௯)

என்றுநாயகன்வன்னியினியல்பினையுமையாட்
கன்றுகூறினனதலாலறுகுதவாதே
னன்றுவன்னிமந்தாரத்தானதனர்தமக்கங்
கொன்றுபூசனைபுரிகவென்றுரைத்தனன்பிரமன். (௭௦)

இப்பிரப்பிரசாதனன் வரம்பெறுபடல முற்றும்.

ஆக்படலம் ௬௭-க்கு திருவிருத்தம் ௨௭௦௫.

# கிருத்வீரியன்மகப்பெறுபடலம்.

மடலவிழ்பங்கயத்தவிசின்வானவன்சங்கடசதுர்த்தித்
திட்முறுமேன்மைகள்பலவுந்தெளியவுரைத்திடக்கேட்ட
கடவுளெனுமொருபிதிரன்கைதொழுதுவிரதத்தை
நடவியபின்முடிக்கும்வகைநவிற்றுகெனவவனவில்வான். (௧)

தொடங்கியதிங்களினுதறொடங்கியதிங்களுக்கைந்தா
மிடங்கொளுந்திங்களினுதலேழாந்திங்களினுத
லடங்குசதுர்த்தியிற்கலசமறைந்நபடிதாபித்துத்
தடங்கலசமிசைத்தட்டந்தனையிருத்தித்துகில்விரித்து. (௨)

எந்திரம்வைத்ததன்மேலேயேரம்பன்றிருவுருவஞ்
சந்திரத்தாற்சித்திபுத்திதங்களுடன்சமைத்திருத்திப்
பந்தமறப்பூசித்துப்பரிந்துகுரவனுக்குகந்த
வெந்திரமுமூர்த்தியையுமீந்திடுதல்விதியாகும். (௩)

ஒருபதினுயிரமையாயிரமோராயிரநூற்றெட்
டிருளறுக்குமாகுதியுளேன்றனமாத்திரம்புரிந்து
கருமையுறுமெட்குறுணிகாதலொடுந்தகக்கொடுத்துப்
பொருவில்பசுமுதலானபொருளுடையோன்கொடுத்திடுக. (௪)

எழுமூவரந்தணருக்கின்னடிசிலினிதூட்டி
முழுதாளுமேரம்பமுன்னவனைத்தியானித்து
வழுவாதவவர்சேட்டம்வாஞ்சையொடுநுகர்ந்திடுக
பழுதோடவிரதத்தின்பயன்றருநன்முடிவிதுவாம். (௫)

நண்ணியவிவ்விரதத்தைநகமடந்தையறுதிங்க
ளெண்ணமுறப்புரிந்திறைவரிடப்பாகத்தொன்றுனு
டிண்ணியவெற்படக்குமுனிதிங்களொருமூன்றுற்றிக்
கண்ணியதன்கடன்முழுதுங்கையடக்கிவாய்மடுத்தான். (௬)

மதிநான்குதகச்செய்துவனத்தொழித்தகளன்மீண்டு
பதிபோகத்தமையந்திபருவரற்றுன்பினைநீத்தாள்
விதியோடுமொருவைகல்வியத்தகுகண்ணன்புரிந்து
துதியாருந்திறல்வாணன்றோல்வியுறப்பொருதழித்தான். (௭)

இடையூறுவருந்தோறுமிறந்திடுமுன்காலத்தும்
விடையாகியீச்சுரனைவெரிந்புறந்தாங்கியமாலுந்
தொடையார்வச்சிரத்தடக்கைத்தோன்றலும்யாவரும்யானு
முடையான்சங்கட்டசதுர்த்தியுஞற்றிநலமுற்றேமால். (௮)

கள்ளாறுசான்மடுக்குங்கடுக்கைமலர்த்தொடைமாளூந்
தள்ளாதுமுடிக்கணியுந்தந்திமுகன்விரதம்போல்
விள்ளாதபெரும்பயனைவிளைக்குமொருவிரதமிலை
பிள்ளாய்நன்றறியென்றுபேசினனுன்முகப்பெருமான். (௯)

என்குலமுமெளியேனுமினிதுய்ந்தேமெனத்தாழ்ந்து
நன்குளத்துப்பிதிர்த்தேவனல்விடைபெற்றேரம்பன்
றன்குலச்சங்கடசதுர்த்திமுதலாகச்சதுமுகத்தோன்
கொன்குலவவுரைத்தவெலாங்கொண்டொருபுத்தகத்தெழுதி. (௧0)

சினவத்தியினந்திரியுஞ்செறிகானந்திருந்துதவ
மனவத்திமடங்குறச்செய்மகன்கிருதவீரியன்பாற்
கனவத்தினடுத்திருந்துகரதலொடுமெளவளாய்
நனவத்திற்பயனுக்கல்லியதையிதைச்சொன்னான். (௧௧)

இத்தகுபுத்தகமதனுளேரம்பனொருவிரதம்
வைத்திருக்குமிதுதனைவல்லமறையோர்வாயாற்
பத்தியொடுகேட்டிருந்தபடிவிரதமனுட்டிப்பிற்
புத்திரனுண்டாமுனக்குப்புதல்வவெனப்புகன்றகன்றான். (௧௨)

விழித்தனன்றந்தையைக்காணான்மெலிந்தனனங்கேகரத்திற்
செழித்தமணிப்புத்தகத்தைத்திப்பியமோவெதிர்கண்டான்
கழித்தனன்றன்னுளமழித்தகவலையும்பாதகத்தொடக்கும்
பழித்தபகைஞர்கள்பழியும்பரிவும்வருத்தமுமனைத்தும். (௧௩)

ஒருங்கிருந்தமனைமாதுக்குற்றகனவையுமுரைத்து
நெருங்கியகானகநீங்கிநீண்டபதியினிதேகி
மருங்கடுத்தவமைச்சருக்கும்வாய்மைதெரித்தந்தணர்பா
லிருங்கடவுட்புத்தகத்தையீந்தரசன்வினயினான். (௧௪)

பூப்பசுந்தண்டளிர்கொண்டுபூசித்துப்புத்தகத்தின்
காப்பொருவிவாசித்துக்காவலனேயிதுதன்னின்
மூப்பிளமையில்லாதான்மூத்தமகன்விரதத்தின
கோப்பனைத்துமிருந்ததிதுகூறினனுன்முகனென்றார். (௧௫)

எவ்விடத்துமிதுகாறுமிவ்விரதங்கேட்டதிலை
செவ்வியநின்றவவலியாற்றெரிந்தனம்யாங்களுமின்றென்
றவ்வியமிலுளத்தோடுமாங்கமுகமனுங்கிளந்து
கவ்வியமெய்யன்புளத்துக்காவலன்கைக்கொடுத்தகன்றார். (௧௬)

கத்திரிகோர்வடிகாதிற்கார்முகநீணுதற்சங்கின்
முத்திரிவாணகையுமையாண்முதல்வனரடித்தொழும்பி
னத்திரிமாதவனென்னுமாசிரியன்றனையழைத்துப்
பொத்திரிகாதலினரசன்போற்றினன்சங்கடசதுர்த்தி. (௧௭)

(வேறு.)

அருத்தியினேழாந்திங்களடைவுறமுடிந்தவீங்குஞ்
செருத்தலானயுதமேனேச்செறிபொருள்பலவுந்தூய்மைக்
கருத்துறுமறையோர்க்கீந்துகாவலன்வாழுநாளி
லுருத்தகுமனையாள்கற்கினொண்டொடிகருப்பமுற்றாள். (௧௮)

திங்களொன்பானுஞ்செல்லச்சிறுவனேயீன்றமாது
சங்கமுங்கரமுமில்லாத்தனையன்மேலானவேனே
யங்கங்கணிரம்பிச்சாலவழகெறித்திடுதனோக்கிப்
பங்குவந்தெமதுடங்கிற்பலித்ததேதாவென்றுனைந்தாள். (௧௯)

புரந்திடுங்காவன்மன்னன்பொள்ளெனவடுத்துநோக்கி
யரந்தையுற்றழுங்கிப்பின்னரைங்கரன்விரதமாற்றி
யிரந்திடவந்தமைந்தனிவனிடரவனேதீர்க்கும்
பரந்தழியாதியென்றுபாரியையினிதுதேற்றி. (௨௦)

விழைவொடுசாதகன்மம்விதியினுலியற்றிவேதந்
தழைதருமந்தணாளர்தடங்கையின்மணியும்பொன்னு
மழையெனச்சொரிந்துதாமமாதனாவாட்டும்வார்விற்
கழையவனிகருஞ்சேய்க்குக்கார்த்தவீரியனென்றிட்டான். (௨௧)

பருவரலுழக்குஞ்சேய்க்குப்பன்னிரண்டாண்டுமேவத்
திருமலிமனையிற்றெத்தாத்திரியன்வந்தடுத்தலோடுங்
கிருதவீரியன்மெய்யன்புகிளர்தரவெதிரேசென்று
மருமலர்ப்பதத்திற்றாழ்ந்துவணங்கிவிண்ணப்பஞ்செய்வான். (௨௨)

உடையவவடியேன்பன்னாளுறுபெருந்தவங்களாற்றிக்
கடைவயிற்பெற்றமைந்தன்காலொடுகரங்களின்றி
யடையலர்நகைக்கவந்தானுற்றியவிரதந்தன்னு
ளிடைவருகுற்றம்யாதோவின்னதென்றறிந்திலேனே. (௨௩)

மைந்தனில்லாமற்பன்னாள்வருந்தினேன்மைந்தன்வந்துஞ்
சிந்தையின்வருத்தஞ்சற்றுந்தீர்ந்திலனென்னசெய்கே
னந்தணகருணைவைத்திங்கவன்முடநீங்குபாயந்
தந்திடல்வேண்டுமென்றுதளர்வொடுமிரந்துநின்றான். (௨௪)

முனைவணங்குவந்துபார்த்துமுடிகெழுவேந்தனேநின்
றனையனைப்பார்க்கவேநாஞ்சார்ந்தனங்கொணர்கவென்று
னனையனுமுன்னருய்த்தானறிவனச்சிறுனைநோக்கி
யினையலேயிறைவனுவனெனத்தெளித்திதனைச்செய்தான். (௨௫)

மறுவிலோரெழுத்தினுயமந்திரத்தீக்கையாற்றிச்
சிறுவனஞ்செவியிலோதித்தீர்ந்தனன்முனிவர்கோமான்
கிறுதவீரியனைநோக்கிக்கிளர்மகன்வனத்திலென்னை
யுறுவிமந்திரத்தையெண்ணியுயர்வரம்பெறுதற்கென்றான். (௨௬)

பரிசனத்தவரைக்கூட்டிப்படர்பெருங்கானிற்செல்ல
வரிசையின்விடுத்தான்றந்தைமைந்தனும்வனத்தின்வைகிக்
கரிசறவுணவுவிட்டுக்கணேசனைக்கருத்துணன்னித்
தருசிறுபொறிகளோம்பித்தனிமனுக்கணித்தல்செய்தான். (௨௭)

பன்னிரண்டாண்டுசெல்லப்பணைக்கைமாமுகத்துச்செம்மன்
மன்னவகுமாரனேற்கும்வைப்புறுந்தடாகத்தண்ணீர்
தன்னிடைநின்றுந்தேவர்தன்புடைசூழத்தோன்றி
முன்னெதிர்நின்றான்கண்டுமுடவனுள்ளகத்தாற்றாழ்ந்தான். (௨௮)

கடவுளர்பெருமானெக்கிக்கருதியவரங்கேளென்றான்
முடவனென்முகத்தைநோக்கிமுற்றுநீகாக்கவென்றான்
மிடல்படுமிரண்டுதாளும்வியன்கையாயிரமுமேனைத்
திடமுறுவரமுநல்கித்தேவர்கடேவன்சென்றான். (௨௯)

எம்பிரானோடங்குற்றவிதழ்விரிகமலனாதி
யும்பராரவனைநோக்கியொருகற்பகாலவாயுள்
பம்பவாழ்ந்திதமேயார்க்கும்பயிற்றியொன்னாரையெல்லாம்
வெம்புவாளிகளைந்தூற்றால்வெல்கவென்றருளிப்போனார். (௩௦)

வரங்கள்வந்தருளிநாதன்மறையுமுன்மன்னன்மைந்தன்
கரங்களாயிரமுங்காலுங்கதுவுறநோக்கிநோக்கி
யிரங்கியகருணையுன்னியிளகிநெஞ்சுருகக்கண்ணீ
ருரங்கலந்தொழுகவாக்கியுலப்பிலாவன்பிற்றாழ்ந்தான். (௩௧)

திவளொளிமணிப்பொற்கோயில்சிற்பமோடாங்குச்செய்து
தவளவெண்மதியம்வேய்ந்தசடைமுடியிறைவர்தன்முன்
பவளமெய்ந்நிறத்தராகிப்பார்ந்தமைசருதிமூர்த்தி
பவளான்மணியிற்செய்துபதிட்டைசெய்தருச்சித்தானே. (௩௨)

(வேறு.)

பிரவாளமூர்த்தியினைக்கார்த்தவீரியனியற்றிப்பேணுமாற்றாற்
பிரவாளவிநாயகரென்றவர்தமக்குப்பிறங்கியகானகத்துக்கென்றும்
பிரவாளவனமென்றும்பெயர்வழங்கும்பெருங்கொடைக்கைச்சூரசேனா
பிரவாளவிநாயகர்தம்பெருமையெவரேமுழுதும்பேசுநீரார். (௩௩)

தரணிதரித்திடுமாற்றல்பெறச்சேடனடுத்துநகர்தானுண்டாக்கித்
தரணிதரநகரமெனவந்நகர்க்கும்பிரவாளச்சாமியார்க்குந்
தரணிதரவிநாயகரென்றொருபெயருமுறச்சாத்தித்தகப்பூசித்துத்
தரணிதரித்தானவரைப்பூசனைசெய்திலங்கையர்கோன்றலைமைபூண்டான்.

பாண்டவர்களாங்கடுத்துப்பூசித்துமுன்னிழந்தபாரைக்கைக்கொண்
டாண்டனர்களாதலினாலத்தகையசங்கட்டசதுர்த்திதன்னிற்
காண்டகச்செய்யொருநாளைவிரதத்தையெனதுகரநலத்தினல்கி
னீண்டமணிவிமானமிதுவிண்ணெழுமென்றானெடியவிசும்பாள்வேந்தன். ()

இருதவீரியன் மகப்பெறுபடல முற்றியது.

ஆக படலம், ௬௮-க்கு திருவிருத்தம். ௨௭௪௦.

# இந்திரவிமானம் விண்ணெழுபடலம்.

வீரவேல்வச்சிரத்தடக்கைவிண்ணோர்கோமான்றனைமீட்டுஞ்
சூரசேனன்பணிந்தெழுந்துசொல்வானங்காரகசதுர்த்தி
யாரவாற்றும்விரதமுமாசறுக்குஞ்சமிமந்தாரமுநல்
வாரமாகுமிதியாசவகுப்பினோடுந்தெருட்டினையால். (௧)

அங்கைத்தலத்துநெல்லியெனவனைத்துமறிந்தேனிவைதம்மைத்
தங்கும்புவியிலிதுகாறுஞ்சாற்றக்கேட்டிலேனருளா
லிங்குத்தமியேற்கருள்செய்தாயெளியேன்புரியுங்கைம்மாறென்
றுங்கப்புலவர்க்கிறைவவெனத்துயமுகமன்பலமொழிந்து. (௨)

அண்ணலமலர்க்குரித்தானவங்காரகனற்சதுர்த்தியினைப்
பண்ணும்விரதிதனைநாடிப்பலனையிவர்க்குக்கொடுப்பித்து
மண்ணினசையாதிருக்கின்றவாள்விட்டொளிரும்விமானத்தை
விண்ணினெழுந்துசெலச்செய்வாமென்றுதூதுவிடுத்தனனால். (௩)

சென்றதூதர்மனைதோறுஞ்சேர்ந்துசேர்ந்துவினவுங்கால்
வென்றவொளியினொருமானம்விண்ணத்திழிந்துவரநோக்கி
நன்றுமிதனைத்தெரிதுமெனநயந்தாரனையதூதுவர்க
ளொன்றும்புவிமேல்வந்திருந்ததுலவாவந்தவிமானமே. (௪)

அந்தவிமானத்தகத்திருந்தவைங்கைப்பெருமான்றூதுவர்க
ளந்தநகரத்தொருபுலைச்சிக்கணியார்தெய்வவுருவளித்துச்
சந்தமணிப்பொன்விமானத்திற்றகுமாறேற்றவதுகண்டு
புந்திவிழைந்துபணிந்துபுவிபுரப்பான்றூதர்வினவுவார். (௫)

இம்மைப்பிறப்பின்புலைச்சியிவளெனைத்துந்தருமஞ்செய்தறியா
ளம்மைப்பிறப்பிற்செய்திருந்தவரியதவங்களடுத்தனவோ
செம்மைத்தவத்தார்தமக்குமுறுந்தேவவிமானமிவட்களித்தீர்
நும்மைப்பணிந்தேமுளந்தெளியநுவலீரெனவன்னவர்நுவல்வார். (௬)

(வேறு.)

வரைபுரையுமாளிகைசூழ்வங்காளமெனுநகரிற்
றரையளிக்குஞ்செங்கோலான்சார்ங்கதரனெனும்பெயரா
னரையனவனினிதுயிர்த்தவணங்கவள்சுந்தரியென்பாள்
புரையறுசித்திரனென்னும்பூபதிக்குமனையானாள். (௭)

மெல்லிசையால்விழியெறியால்விளங்குமுருப்பேரழகா
னல்லிசைவானவராகநவையறுமாதவராக
வல்லியவளெதிரெய்தியங்காதாரிலையன்னா
ளில்லினியல்பினைவிடுத்தேயாவரையுங்காமுற்றாள். (௮)

அங்கியெதிர்கைப்பிடித்தவாசனறிந்தறிவிலாய்
நங்குலத்தைக்கெடுப்பதற்கோநண்ணினுயினிச்சற்றுந்
தங்கியவில்லிகத்தனையேற்றசையரிந்துநுகர்விப்பே
னிங்கணடங்குதியாலென்றெரிவிழித்துச்சிறைசெய்தான். (௯)

அடங்கினள்போற்சிலநாளகத்தேதல்லிகடவாளாய்
விடங்கமேவியமாதுமேவியசித்திரைதன்னிற்
றடங்கைவாள்கொடுகணவன்றனையுயிர்மாய்த்தயலொருவ
னிடங்குலாய்க்கலவிநுகர்ந்திருந்தனள்காவலர்கண்டார். (௧0)

சித்திரனுருயிர்வதைத்ததிருடியிவள்பிதிராமே
கைத்தலத்திற்கயிறிட்டுக்கட்டிமிகவெற்றுமென
நத்தமெலாந்திரிகின்றநல்லகாவலர்பற்றி
யத்தனருளேவலினுலவளைமுறைசெய்திறுத்தார். (௧௧)

பொதிபாவப்பிணிபறித்துபோதந்துநமன்றூத
ரதிகோரநரகத்திலளவிறந்தநெடுங்காலம்
விதியாலேயிடரனைத்துமேவித்துவிடவறிவின்
முதியோர்கள்பயிலிந்தமுதுநகர்ச்சேரியிற்பிறந்தாள். (௧௨)

முற்பவத்துமிவள்பாவமுடித்ததேயல்லாம
னற்பயனேரெள்ளளவுநயந்தறியாளதுபோக
விப்பவத்துமிதுகாறுமெள்ளளவுநன்மையில்லாள்
செப்பமுடையீரன்னசெய்கையினளாயிடினும். (௧௩)

இற்றைநாளுதயத்திலிவளரியன்மிகப்பருகிப்
பற்றுமாறறிவழிந்துபடுக்கையெழாளாய்க்கங்கு
லுற்றபோதயர்வொழியவுறுபசியுமிகவாட்ட
முற்றுமூண்கொளவிந்தமுதுநகர்வீதியிற்புக்காள். (௧௪)

புக்கமாதொருமனையின்புறத்தேகுமமையத்திற்
றக்கநாளிதுசுமுகர்சதுர்த்திநாளாகமனைத்
தொக்குளாரவ்விரதஞ்சூழ்ந்துநிவேதித்தயின்று
மிக்கசேடந்தெருவின்வீசினர்களெடுத்தயின்றாள். (௧௫)

அணவியவம்மனைவாணரனைவோருந்தம்மியல்பாற்
கணபதியென்றிடக்கேட்டுக்கணபதியென்றுண்மூக்காற்
றணவருஞ்சங்கடசதுர்த்திதனிற்றமைச்செப்பினளென்றே
குணநிறைந்தவிநாயகனூர்கொண்டுவரவெமைவிடுத்தார். (௧௬)

அணங்குறுமிப்புலைமாதையணங்குறுத்திவிமானத்தி
லிணங்குறவேற்றினமென்றுரேரம்பனேவல்புரி
கணங்களுரைத்தமைகேட்டுக்கைதொழுதுகாவலன்றன்
குணங்கடவாதேவல்புரிகொள்கையினரிதுசொன்னூர். (௧௭)

புத்தேளிருலகாளும்புரவலனேயினன்பார்வை
தைத்தேகுங்கதிவழுக்கித்தமனியமார்விமானத்தோ
டித்தேயத்திடைவந்தானிருங்காட்சிகொடுமின்கண்
முத்தேவரறியாதமுதல்வர்கணத்தீரென்றார். (௧௮)

தூதுவரைமுகநோக்கித்தொக்ககணத்தவரிறைவன்
யாதுபணியருள்செய்தானதுவன்றியாதொன்றும்
பேதுவருமாயிடினும்பேணுதல்செய்யோமினிநாம்
போதுவமென்றுரைத்தருளிப்பொருக்கெனவிண்ணிடையெழுந்தார்.

அலைசிறகர்மலைபோல்விண்ணுறுத்தேகும்விமானத்திற்
புலையுருவநீத்திருந்தாள்புணர்விழிநோக்கவனிமிசை
நிலைமலைபோலிருந்தநெடுவிமானத்திலுறவதுவுந்
தலைவன்விழியான்மலத்திற்றணந்தவர்போலெழுந்ததே. (௨௦)

இந்திரனூர்விமானமும்விண்ணிடையேகுமமையத்தில்
வந்திருந்தூதுவர்சூரசேனன்மலரடிவணங்கி
யந்தரநின்றொருமானமடுத்தபடிமீண்டபடி
யெந்தவிதமுங்தெரியவினிதெடுத்துவிளம்பினார். (௨௧)

கேட்டரசன்மகிழ்கூர்ந்துகிளர்ந்தவிருவிமானமுந்தன்
னோட்டலங்கற்றிணிநெடுந்தோட்டுணைநிலத்திலுறவணங்கி
வாட்டமுறுநல்குரவுமாறிடவானிதியமெலா
மீட்டினவர்போற்களிப்பினெய்திமனையகத்திருந்தான். (௨௨)

என்றுமலர்த்தவிசாளியிறைஞ்சியசீர்வியாதமுனிக்
கன்றுபுவிவிமானத்தோடடுத்தமகவான்மீட்டு
மொன்றுவிசும்பெழுமளவுமுற்றபலகதைமுழுதுந்
தொன்றுதொடுமுறையாகச்சுவையமிழ்தமெனவிரித்தான். (௨௩)

இந்திரவிமானம் விண்ணெழுபடல முற்றியது.

ஆகபடலம் ௬௬-க்கு திருவிருத்தம் ௨௭௬௩.

# சூரசேனன்முத்திப்படலம்.

வயந்தகுசூரசேனன்வசிட்டனுங்குரவற்கூவி
நயந்தகுமாசித்திங்கணண்ணியசெவ்வாய்வாரம்
வியந்திடுஞ்சதுர்த்திதன்னின்விநாயகர்பாதமுன்னிப்
பயந்திடுவிரதநூலிற்பன்னியநங்கியற்றினானே. (௧)

மதிவருஞ்சதுர்த்திதோறுமல்கியவிரதநோற்று
விதியுளிவாழுநாளில்விநாயகர்கருணைகூர்ந்து
முதிரொளிவிமானத்தோடுகணங்களைமுடுக்கவந்தப்
பதியயிற்கணங்கள்போந்தார்பார்த்திபனுவகைபூத்தான். (௨)

மினமலிவிமானநோக்கிவியந்துசூழ்வோர்ந்துநேரோ
பன்முறைவணங்கிநின்றான்பார்த்திபன்கணத்தார்நோக்கி
நின்மலக்கணேசனெம்மைநின்னைக்கொண்டடுக்குமாறு
நன்மையின்விடுத்தான்மன்னநண்ணுகவிமானமென்றார். (௩)

நிருபனுங்கவனைநோக்கிநீங்கியிப்பதியாரொன்னை
யொருபகலேனும்வாழாருடன்கொண்டுபோகல்வேண்டும்
வருபெருங்கருணைநோக்கின்வரதர்காளென்றானன்றே
யிருபலரோடுமென்றெய்தியகணத்தோரம்மா. (௪)

பெரும்பதிவாணரெல்லாம்பெட்புடனேறினார்கள்
சுரும்புளரலங்கன்மார்பிற்சூரசேனனுந்தன்சுற்றத்
திரும்பரிசனத்தினோடுமேறினன்வணிகனான
வரும்பெருநோயினானுமவருடனேறினானே. (௫)

பாதகநிறைந்தநோயின்வணிகனும்பயின்றவாற்றான்
மேதகுவிமானம்விண்ணுள்வேந்தனூர்விமானம்போன்ற
தீதகலிலத்தினின்றுமெழாமையென்னென்றுதேர்ந்து
போதகமனையமன்னன்புலங்கொளக்கணத்தோர்சொல்வார். (௬)

குட்டநோய்வணிகன்வந்துகூடியதீங்குதன்னா
லட்டொளிவிமானஞ்சற்றுமசைந்திலதனையான்முன்னர்ப்
பட்டதோர்பவத்திற்சாலப்பாவமேபுரிந்தானற்றான்
முட்டியநோயிற்பட்டானதனையுமொழியக்கேண்மோ. (௭)

காமருகவுடதேயங்கலந்தமர்வாழ்க்கையாளன்
மாமறைக்குலத்திற்றோன்றிவளர்தவசீலனென்பான்
றாமமென்குழலினில்லாள்சாகினியென்பாளின்னோர்
தோமறவாழுநாளிற்றோன்றலொன்றுதித்ததன்றே. (௮)

புத்திரன்சாதநோக்கிப்புதனெனப்பெயரிட்டார்க
ளத்தகுபெயருக்கேற்பவரும்பெறன்மைந்தன்வீறிக்
கொத்துறுமறைகளோதிக்கோதிலாக்கலைகளாய்ந்து
மெத்தியவறிஞரெல்லாம்வியத்தகுமேதையானான். (௯)

தருணம்வந்தடுத்தலோடுந்தந்தைதாய்மகிழ்ந்துநோக்கி
வருணமுங்குலமுமாண்பும்வன்மையுமற்றுநாடிப்
பொருணமக்கிதுவாமென்றுபுதல்வர்க்குவதுவையாற்றாற்
றெருணவின்மனத்துச்சாவித்திரியெனுமாதைச்சேர்த்தார். (௧௦)

அரத்தமெல்லடியுங்கையுமதரமும்நாவும்வீங்கி
புரத்தமர்முலையுந்தோளுமேனையவுறுப்புமும்பர்
புரத்தினுமில்லையென்னும்பூவையைப்பொருந்திவாழ்நாள்
பரத்தையிற்பிரிந்தான்பண்ணடப்பாவத்தாற்புதனென்றுள்ளான். (௧௧)

மதுநுகர்மாந்தர்போலமயங்கியமதியனாகிப்
பொதுமடமாதைநீங்கான்பொம்மலுமாங்கேதுய்த்துக்
கதுவினன்புதனன்றனைக்காதலங்குரவர்காணூர்
முதுமையின்முன்றினீங்கார்முனிதுயருழந்தார்சின்னாள். (௧௨)

உண்டியுந்துயிலுநீங்கியுறுதுயருழந்ததாதை
தண்டமொன்றான்றிமெல்லத்தடத்தெருவூடேதேடிக்
கொண்டுசெல்காலைநேரேகுறுகுமோர்வீமனென்பான்
கண்டுநின்மைந்தன்வேசைக்காதலனானென்றான். (௧௩)

பையவேயாங்குச்சென்றுபரத்தையின்வாயினின்று
மெய்யெலாநனைத்துமூத்தவேதியன்மகனைக்கூவிப்
பொய்யெலாநிறைந்தசெவ்வாய்ப்பூவையர்சேரிநண்ணி
யுய்யலாநெறிகைக்கொண்டாயுன்னையொப்பார்களாரோ. (௧௪)

நலங்கிளரொழுக்கம்விட்டாய்நான்மறையோதல்விட்டாய்
குலங்கிளர்மயின்மென்சாயற்கோற்றொடியார்வம்விட்டா
யிலங்கியவாழ்க்கைச்செய்கையெனைத்தையும்விட்டாயேனுந்
துலங்கியவெமையும்விட்டுத்துன்னுறுதிருக்கலாமோ. (௧௫)

நின்மனமரமோகல்லோநெகிழ்தராவிரும்போசொல்லாய்
வன்மனப்பேதையோரும்வயதின்மூத்தவனாநீங்க
றன்மமன்றென்றுகாத்திற்றங்குவர்சகலநூலு
நன்மையினுணர்ந்தநீமனங்களைத்துறந்தாயென்றான். (௧௬)

எனக்குநீபுத்திசொல்லவிங்குவந்தனையோவென்று
மனக்கொடும்பதகன்கையால்வண்கவுட்புடைத்தான்வல்லே
தனக்கொருசார்புமின்றித்தவசீலனாவிமாய்ந்தா
னினக்கிதுதக்கதென்றுநிலங்கிழித்தடக்கியிட்டான். (௧௭)

பல்வகைப்பொருளுங்கொண்டுபரத்தைபாலளிப்பவெண்ணி
யில்வயிற்சென்றானில்லினிருந்தநற்றாயுங்கூடி
நல்வரவென்றுபுல்லிநம்பனேயாங்குச்சென்றாய்
செல்வலிவ்விடத்துக்கென்றாற்சிந்துமோவாயின்முத்தம். (௧௮)

இங்குனைக்காணாகியிராப்பகலுணவுமற்றுந்
தங்கியதளர்விேனாடுதளர்வுறவிருப்பானுந்தை
யெங்கணுநின்னைத்தேடியெய்தினன்யாங்குற்றானோ
வங்கவன்றன்னைநாடியழைத்துவாவப்பாவென்றாள். (௧௯)

சென்றவன்றன்னைநாடிச்செல்லவோவிருக்கின்றேனு
னன்றுநன்றென்றுசிறிநமனெனத்தண்டான்மொத்திக்
கொன்றனைதனையுமாங்கேகுப்பையைக்கிண்டுட்பெய்தான்
மன்றலங்கூந்தற்செவ்வாய்மனையவள்கண்டுசொல்வாள். (௨0)

ஆவவென்செய்நாயக்தோவளித்தவர்தமைக்கொல்வாரோ
பாவமும்பழியும்பாராய்பரத்தையர்கலமேபார்த்தாய்
காவலனறியினின்னைகழுந்தறியெற்றுவானே
சாவதுபெற்றால்வேசைதனிலம்பெறுவதெங்கே. (௨க)

எற்றெனவிரங்குக்தீமையிழைத்தனையென்னசெய்கேன்
மற்றினியுய்யுமாறும்வண்சுகநுகருமாறு
முற்றுறவுரைப்பன்கேளாய்முதல்வனேபரத்தையார்வம்
பற்றுமுன்னில்லினுள்ளபாக்கியமனைத்துந்தோற்றாய். (௨௨)

இருமுதுகுரவர்தம்மையிழந்தனையிருந்துவாழுந்
திருநிலமின்றோநாளைத்தினங்கொலோநம்மிற்றீரும்
பருவருவனமோவேற்றுப்பதிரமோநாஞ்சென்று
மருவிடமாவதோராய்வரைவிலாரார்வப்பேற்றை. (௨௩)

மன்னவன்வெகுளாவண்ணம்வரைவிலாளிடஞ்செல்வார்க்குப்
பொன்னெடுமலையுண்டேனும்பொய்யினர்புகழ்போன்மாயு
நன்னிதியிறந்தபின்றைநாயினுங்கடையாயெண்ணித்
தன்னடியேவலொன்றேதகக்கொள்வாளின்பந்தாராள். (௨௪)

உயிரொலாமுருக்கித்தீராவுறுபெருநோயுஞ்சின்னாட்
பயிலுறவந்துமூறும்பண்புளார்வெறுக்கத்தக்க
செயிரொலாமிவ்வாறெய்துந்தீங்குசெய்கின்போல்வார்க்கு
மயினியுங்கிடைக்குங்கொல்லோவகத்திலன்பிலைாத்தோயின். (௨௫)

இளமையால்வனப்பாற்கற்பாலேகமாகியவுள்ளன்பின்
வளமையாலெனக்கொப்பானமகளிருமுளரோசொல்லா
யளவிலாப்போகமெல்லாமவரெனநினக்கிங்கேற்பத்
தளர்வுறுதீவலென்பாற்றங்கிநீநுகர்திகண்டாய். (௨௬)

ஆண்டுகடோறுங்கூடற்கறைதராத்திங்களுண்கும்
வேண்டியதிங்களெட்டின்விலக்கியபருவமைந்துந்
தீண்டுதற்காகாமுந்நாள்செலவழுக்கானவேனைக்
காண்டகநாளுங்கூடக்கருதினுமிசைவேன்கண்டாய். (௨௭)

என்னிடையெவ்வாறாகியிருப்பினும்பழிபாவங்க
டன்னமுஞ்சாராநல்லதருமமும்புகழுமாகுங்
கன்னவிறோளாய்வேற்றோர்கடைத்தலைமிதித்திட்டாலு
மன்னுவபழியேனுடுவெழுக்கெலாமொருங்கேயென்றாள். (௨௮)

உள்ளுறவெகுளிமூளவுடன்பட்டுக்கேட்டான்போன்று
தெள்ளியவுளத்துச்சாவித்திரியுமாமுழுதுங்கேட்டு
மெள்ளவேயெனக்குப்புத்திவிளம்பவந்தனைகொலென்று
தள்ளினனிலத்துமாதைத்தாளினுலுதைத்துக்கொன்றான். (௨௯)

மன்னவனறிந்தும்மைவருந்துமென்றஞ்சித்தீயோன்
முன்னுறவணியும்பொன்னுமுழுவதுமெடுத்துக்கொண்டு
நன்னகரிரவினீங்கிநசையுறுபரத்தையோடு
துன்னருங்கானிற்செல்வான்றூத்தவவனமொன்றுற்றான். (௩௦)

தவவனமதனில்வாழ்வான்றக்கதாலவனச்செம்ம
லிவர்புனலாடச்சென்றானில்லவள்சுலபையென்பாள்
கவலையொன்றின்றிவைகக்கண்டவளெழில்காமுற்றங்
கவமுறுபதகனேடியணிவளைமுன்கைதொட்டான். (௩௧)

திகழ்பெயர்சுலபையல்லானினக்குநான்சுலபையல்லேன்
புகழுடனறத்தைக்கொன்றபொறியிலியென்கைபற்றத்
தகவுகொனினக்கென்றங்கிதடவிழித்துணைகள்கால
வகலுறக்கையிற்றள்ளியைதெனச்சாபமிட்டாள். (௩௨)

காளையாம்பருவத்தானுங்காயத்தின்வலிமையானும்
வேளைநேர்வனப்பினானுமெல்லியர்நலந்துய்க்கின்றாய்
வாளைநேர்விழியாரின்பமறந்துநீநுகராவண்ண
மூளைவாயிடவன்குட்டநோயினையுறுகவென்றாள். (௩௩)

வைத்தடிபெயர்க்குமுன்னமாமைமெய்கருகிநைந்து
கைத்தலத்தோடுகாலுங்காைசொரிநிணங்களாகிப்
பைத்தமென்முகமும்வேறாய்ப்பார்த்தவர்வெருவமீண்டா
னத்திறமறிந்துவேசைகைத்தொடுமகன்றுபோனாள். (௩௪)

பாதுகாப்பாளரின்றிப்பழுவத்தினலைந்துசெத்தான்
காதுவேலியமதூதர்கட்டினர்கொண்டுசென்றார்
கோதுதீரளவுங்கோரக்கும்பியினிடுகவென்றா
ஞேதுநூல்வழியின்வந்தார்க்கும்பர்நாடளிக்குநாதன். (௩௫)

அரகரவென்னசொல்கேமளறெலாமழுத்திவிட்டார்
விரவுமுற்பாவசேடமேவுதலானுங்கற்பி
னுரமிகுசுலபைசாபவெச்சமுமுறுதலானும்
பரவுமிப்பவத்துங்குட்டநோயனாய்ப்பரிணமித்தான். (௩௬)

அறன்கடையஞ்சாதாரவாற்றுமிவ்வணிகன்றன்னைப்
பிறன்கடைநின்றார்தம்மைப்பேணாதொழிப்பார்போல
மறன்கடைபடாதவேலோய்மண்ணிடைவிடின்விமானத்
திறன்கடைபடாமல்விண்ணிற்செல்லுமீதுண்மையென்றார். (௩௭)

உற்றதுகணத்தோர்கூறவுள்ளதென்றுளத்திற்றெள்ளி
யற்றமிலரசனென்னையாளவந்தடுத்தீர்குட்டி
பற்றியபாவந்தீரும்பரிசுசெய்துடன்கொண்டேகும்
பெற்றியேசூழ்கவென்றுபெரிதடியிறைஞ்சிநின்றான். (௩௯)

வழிபடுமரசர்க்காகவணிகணைக்கணத்தூந்தேவர்
கழியருள்விழியினோக்கிக்கணபதியென்றுமுக்காற்
செழிபவமுழுதுநீங்கச்செவியிடையுரைத்தாரன்னா
னழிதுயராக்கைநீங்கியமரனாய்விளங்கினானே. (௩௪)

பலரிடைவிழுந்தபொல்லாப்பாம்புமாருயிர்மாயாதென்
றுலகவருனாக்கும்வார்த்தையுண்மையேபோலுமென்று
நலமுறுபல்லோர்நாப்பணண்ணியபாவக்குட்டி
நிலமிசைவிழாதுவானினெடுங்கதிக்கருகனானான். (௫0)

தேவரும்வணங்கச்சூரசேனனூநகரினுள்ளார்
யாவரும்விமானத்தோடுமெழுந்துவான்முழுதுநீந்தி
மேவருவளங்கள்சான்றவிநாயகருலகநண்ணித்
தாவறுபோகந்துய்த்துத்தத்துவனடிக்கீழ்வாழ்ந்தார். (௫௧)

தெவ்வரைவணக்குஞ்சூரசேனனென்றரசனூற்றி
யவ்வுலகடைந்தவாய்மையறைந்தனன்பரசுராமன்
கவ்வியவன்பினூற்றுங்காதையுங்கேட்கவென்று
வவ்வியவியாதன்கேட்பமலரணைக்கிழவன்சொல்வான். (௫௨)

சூரசேனன் முத்திப்படல முற்றியது,
ஆகபடலம் ௭0-க்கு திருவிருத்தம் ௨௯0௫.

---

## பரசுராமன்வரம்பெறுபடலம்.

---

பவளவனத்திடைமுன்புபகர்கார்த்தவீரியன்றான்
பவளமணித்திருவுருவிற்பதிட்டைபுரியைங்கரனைப்
பவளநிறச்சடையானைப்பராபரனைநிராமயனைப்
பவளவிநாயகனென்னும்பண்ணவனைத்தொழுததன்பின். (௧)

இருதவீரியனென்னுங்கெழுதகைமைத்தந்தைபான்
மருவுகாதலிற்சென்றுவணங்கினன்மற்றவனோக்கிப்
பெருகுகாதலிற்றழுவிப்பேரின்பமுற்றான்போ
லொருவிநாயகனருளேயுன்னியுளமகிழ்கூர்ந்தான். (௨)

வரம்பெற்றுச்சரம்பெற்றுவயங்கியவாயிரமென்னுங்
கரம்பெற்றுச்சரண்பெற்றகாதலனுக்குலகளித்துத்
திரம்பெற்றபேரருளிற்செம்மலரடித்தொண்டி
னுரம்பெற்றுவாழ்ந்திருந்தானுறுங்கிருதவீரியனே. (௩)

ஆணாகப்பெண்ணாகவடிதொழுவார்க்கருள்சுரக்குங்
கோணாகமணாக்கசைத்தகுஞ்சரமாமுகனருளா
னாணாகமுறும்வரைபோனலஞ்சிறந்தவிமானமொடு
பூணாகத்திடைதயங்கும்பொருவில்கணம்புடையடுத்த. (ச)

அரிசிவன்பங்கயனறியாவகண்டபரிபூரணனு
மரிசிமகடனைமணந்தமணாளனருளுருவெய்தித்
துரிசின்மனைமாதோடுந்தொக்கபரிசனத்தோடும்
பரிசிலர்கள்புகழ்மன்னன்பணிந்துவிமானத்திவர்ந்தான். (ரு)

செய்யொடுகூடியபெயரினெடுந்தகையானெடும்புகழான்
மெய்யொடுகூடியகணவூர்விமானத்தினிடையேகிப்
பையொடுவாளரவணிந்தபரமனாருலகடுத்துப்
பொய்யொடுகூடாவின்பப்புணரியிடைத்திளைந்தனனால். (சு)

காவலர்கடொழுதேத்துங்கார்த்தவீரியன்கடல்சூழ்
பூவலயர்தாட்படுத்துப்பொருதவரையைஞ்ஞூற்றி
னேவிலத்தின்பொருதழித்திட்டிந்திரனுகறுமொறுப்ப
நாவலர்கள்புகழ்ந்தேத்தநன்றரசாட்சியினிருந்தான். (எ)

கடவுளரும்பணிகேட்பக்கார்த்தவீரியன்வாழ்நாட்
டடநெடுஞ்சோலைகள்புடைசூழ்சையவரைச்சாரலிடை
யடர்பொறிவென்றருந்தவத்தினான்றசமதக்கினித
னிடனகலாப்பெருங்கற்பினிரேணுகையோடினிதமர்ந்தான். (அ)

துழாயணிந்தமணிமார்பன்றொல்லையொருகாலத்து
வழாதபெருந்தவப்பிருகுவகுத்தகொடுஞ்சாபத்தாற்
றழாலுறுமோர்மகனாகித்தக்கவவர்பாலுதித்துக்
குழாமுனிவர்புகழ்ந்தேத்தக்குவலயத்தில்விளங்கினான். (கூ)

இராமனெனும்பெயருடையவேந்தலவன்றந்தைபாற்
றராதலத்திலொருவர்களுந்தனையொப்பாரில்லையென
விராவியமெய்யன்பினொடுமிக்கபணிவிடையாற்றிப்
பராவுதல்செய்வானொருகாற்படர்ந்தனனைமிசவனமே. (க0)

அன்னநைமிசவனத்திலமர்ந்திருக்குங்காலத்திற்
றன்னியல்பிற்கார்த்தவீரியன்வேட்டைதனைக்குறித்துப்
பொன்னசும்புஞ்சையவரைப்புறஞ்சூழ்ந்தகானகத்துக்
கொன்னவில்பல்படையேந்திக்குழாத்தினொடுஞ்சென்றடுத்தான். (கக)

விருகங்களறவேட்டைவிளைத்துமீண்டேகுவா
னருகங்குத்தவச்சூழலதுநோக்கியாதிதுவென்
றுருகங்கமொடும்வினவவுழையர்சமதக்கினியாம்
பெருகங்கமறையாளன்பேணியவாச்சிரமமென. (கஉ)

படைவீரர்தமைநிறுத்திப்பயிலமைச்சர்நால்வர்கடன்
புடைசூழவாச்சிரமம்புகுந்துமுனிகழல்வணங்கி
விடையூர்திபோலிருந்தீர்மெய்த்தவத்தீருமைக்கண்ட
கடையேனும்பெருந்தூய்மைகைக்கொண்டேனெனத்துதித்தான். ()

சீர்த்தவாதனத்திருத்தித்திருமுனிவன்யாரென்னக்
சார்த்தவீரியனடியேன்கார்த்தவீரியனிங்குச்
சூர்த்தமானினம்வேட்டைதொடர்ந்தடுத்தேன்முற்றவத்தாற்
கீர்த்திமாதவத்தோய்நின்கேண்மையும்பெற்றேனென்றான். (௧௪)

பொதுநீக்கியுலகாளும்புகழ்க்கார்த்தவீரியனே
யிதுகாறும்புகழுடம்பையியம்பிடக்கேட்டறிந்திருந்தா
முதுமாமைதிகழ்பூதவுடம்பையுமுன்னுறக்கண்டா
மதுமாந்தித்தெனவின்றுமகிழ்ந்ததுளநின்வரத்தால். (௧௫)

வெய்யவனுமிடைவானமேவினன்வேட்டையினீயு
மெய்யயர்ந்துபோந்தனையால்வேந்தனேயமுதயின்று
பையநினதிரும்பதிக்குப்படர்தியெனமுனியருளக்
கையமருங்கூரிலைவேற்கார்த்தவீரியனுரைப்பான். (௧௬)

அண்ணலேபாத்திரங்களாகிய நும்போல்வார்பாற்
றண்ணீராயினும்வாங்கித்தகப்பருகலேவேண்டு
நண்ணினேனொருவனலனுடனாய்வந்தவர்க
ளெண்ணிலாரெனத்திருப்புமணித்தேகவிடுமென்றான். (௧௭)

வானைவேண்டினுமண்ணில்வரவழைக்குமுனிநோக்கிச்
சேனைகாவலவதற்குச்சிந்தனைநீசெயல்வேண்டா
தானையாவையுநகரத்தருவாமின்னடிசில்போய்க்
கானவாறெழுகுமதன்களையிளைப்பாறுதியென்றார். (௧௮)

திருந்தியமன்னவனதியின்றீரத்திற்சென்றிருந்தா
னருந்தவனுமிரேணுகையையழைத்தகிலமன்னவனே
விருந்தெனப்போந்தனனவற்குவிருந்துசெய்வாமெனக்கூறி
வருந்தலறத்தேனுவினைமதித்தனன்வந்ததுதேனு. (௧௯)

இருவரும்பூசித்திறைஞ்சியினிதியம்பவத்தேனு
கருதிடுமுன்விண்ணுலகங்கவலையுறநகராக்கிக்
குருமணிமாளிகைதெற்றிகூடகோபுரமாட
மருவிடுமம்பலமாதிவகைபலவுநிருமித்து. (௨௦)

வாசமலியறுசுவைநால்வகையுண்டிவிதம்பலவுந்
தாசரொடுதாசியருந்தமணிப்பாத்திரம்பலவுந்
தேசமருமனைதோறுஞ்செறித்துமுனிக்கறிவித்த
தாசகலுமுனியந்தவராசனைக்கூவுகவென்றான். (௨௧)

மாணுக்கரழைப்பவுடன்மணிவீதிபுகும்வேந்தன்
பாணுக்குமிசையொருபாற்பாவையராடல்களொருபாற்
பேணுக்குப்புனலூறப்பெருகடிசின்மணமொருபாற்
காணுக்கற்பனையொருபாற்கண்டுமகிழ்ந்தேகினான். (உஉ)

முனிவனைக்கண்டடிவணங்கிமொழிந்தவவனேவலினு
லினியசுவைவானடிசில்யாவரொடுமிகவுண்டு
[illegible]முறக்கரம்பூசிப்பொசித்தவயர்வுயிர்த்ததன்பின்
றவியிருந்தமுனிவரனைச்சார்ந்தரசனிது சொல்வான். (உ௩)

(வேறு.)

காடுனையான்முனங்கண்டபோதிது
நாடுமுன்னகரமாய்நண்ணிற்றென்கொலாந்
தேடுதற்கரியவான்செல்வம்யாவையுந்
தோடுகொண்டெங்கணுந்துதைந்ததென்கொலோ. (உ௪)

ஒருவனுக்கொருத்திமின்றுபசரித்தென
வருபவரனைவர்க்குமனத்திற்கேற்புற
விருநிலத்தில்லவாமிருஞ்சுவைத்தன
கருணையினூட்டுநற்கணமெங்குள்ளன. (உரு)

மாயையோவிதுநவமான்மியங்கொலோ
தூயைநீயருளெனத்தூயமாதவன்
மாயையன்றிதுநவமான்மியத்தினுன்
மேயநற்றேனுவால்விளைந்ததென்றனன். (உ௬)

கட்டியசடைமுனிகளாயக்கேட்டலு
நெட்டுயிர்ப்பெறிந்தனனினைவிற்கோட்டமே
பட்டனன்பசுவினைப்பற்றிச்செல்லுமா
றெட்டினன்பார்த்திபனுளைத்தன்மேயினுன். (உ௭)

காட்டினுளருந்தவங்காத்துக்காய்கனி
யீட்டிவன்பசியினையிரிக்குநீர்மையை
தீட்டரும்புகழினேய்செருத்தற்றேனுநின்
மாட்டிருந்தென்பயன்மருவத்தக்கதே. (உ௮)

உலகெலாந்திகிரியொன்றுருட்டிக்காத்திடும்
விலகரும்பாரகான்மேவினேனெனக்
கிலகியதேனுவையீந்திட்டாயெனி
லலகிலபயன்படுமறமுமாமரோ. (உ௯)

நலிவறநயந்துநீநல்கிடாயெனில்
வலிதினிற்கொள்வதேமதித்துளேனெனப்
பலியினன்பெண்டினைப்பற்றவுன்னியாங்
கொலிகெழுகழலினனுாக்கிச்சொற்றனன். (௩0)

நன்றுநன்றெனமுனிநகைத்துக்கூறுவான்
வென்றிகொண்டுலகெலாம்விதியிற்காத்திடும்
வன்றிறலரசர்க்குமனுச்சொனீதியிற்
குன்றியும்பிறன்பொருள்கொள்ளச்சொல்வதோ. (௩௧)

ஓதியகல்வியினுணர்வுமாமனு
நீதியுமொழுக்கத்தினிலையுமெய்திய
கோதிலாயெனநினைக்குறித்துளேமிராப்
போதியினிழலெனப்புன்மையெய்தினாய். (௩௨)

என்வயத்தாகியவெழில்கொடேனுவை
நின்வயத்தாக்கிடுநெறியுண்டாமெனி
லென்வயினிரப்பதென்னிமுறைவேந்தனே
நின்வயத்தாக்குதிநீட்டியாதென்றான். (௩௩)

மறுப்பயிலாதமாதவனுரைத்தலுங்
கறுப்பொடுகார்த்தவீரியன்கன்காட்டிறு
ஞறுப்பெனப்பயின்றவேவலர்களூற்றனர்
றொறுப்பயிலாதவான்சுரபிப்பக்கமே. (௩௪)

மட்டவிழ்தாரினான்மாதவற்கிகல்
பட்டமையுணர்ந்துளப்பரிவின்வான்பசு
கெட்டுயிர்ப்பெறிந்ததுநெருங்கும்வீரர்கள்
விட்டகெட்டுயிர்ப்பினால்விளிந்துநீறினார். (௩௫)

திண்ணியகாவலன்செயிர்த்துநோக்குபு
பண்ணியநால்வகைப்படையுமேவினா
னண்ணியபெரும்படையவற்றைநோக்கிய
வண்ணநற்றேனுவுமயிர்சிலிர்த்ததே. (௩௬)

மயிர்தொறும்யவனர்கண்மலர்க்கையேந்திய
வயில்படுபடையொடுமனேகர்தோன்றினர்
செயிரறுதுரகமுஞ்சினக்கண்வேழமும்
பயிலிரதங்களும்பல்லதோன்றின. (௩௭)

எதிர்ந்தனவிருவகைப்படையுமீண்டிகன்
முதிர்ந்தமராடுழிவேந்தன்மொய்ப்படை
பிதிர்ந்ததுசோரிநீர்பெயர்ந்ததுந்தியி
லுதிர்ந்தனதடித்திரளொழிந்ததாருயிர். (௩௮)

எஞ்சியதானைகளெதிர்நின்றுற்றுதற்
கஞ்சினவிரிந்தனவரசனேக்குபு
தஞ்சநம்பால்வரத்தக்கதோவெனக்
கஞ்சமென்கரத்திலைமைவுகாட்டினான். (௩௯)

ஊழிவாயுருமெனவுரறும்வால்வளை
வீழிவாய்மடுத்தொலிவிம்மலூக்கினா
னூழிவாய்த்திரைவளையடக்கமத்தெறி
தாழிவாய்த்தயிரெனச்சகந்தளர்ந்ததே. (௪௰)

கொடுங்கொலைவேலவன்குறித்தசங்கினா
னெடுங்கடலுலகெலாநிலைமைகுன்றியு
நடுங்கிலாயவனர்களன்றுவென்றியெண்
றடுங்கொடுமரத்தினையங்கைவாங்கினான். (௪௧)

தொடைதொறும்வாளியைஞ்ஞூறுதூண்டினான்
கடைவருமூழியிற்கலந்தமேகமு
முடைதருசரமழையொதுக்கிவேந்தன்மேற்
படைபலதூண்டினர்பசுவின்வீரரே. (௪௨)

கலந்தமராடுழிக்கார்த்தவீரிய
னுலந்தனன்வலியெலாமொடுங்கியோடினா
னலந்தருமுனிவனைநலிதுநாமெனச்
சலந்தருமுளந்தனில்வயிரந்தாங்கினான். (௪௩)

அழிந்தனன்வேந்தனென்றமரர்தேனுவங்
கொழிந்ததுமுனிவரனுவகைகண்டுவான்
கழிந்தனபடைகளுங்கரிசின்மாதவன்
மொழிந்துபஞ்சாக்கரந்தவத்தின்முன்னினான். (௪௪)

கழிவுறச்சிலபகல்கார்த்தவீரியன்
விழியினைமூடிமெய்த்தவத்தின்மேவிய
வொழிவறுமுனிவனையுற்றுவாளியா
லிழிவுசெய்துயிரினைவிண்ணிலேற்றினான். (௪௫)

கண்டிரேணுகையெனுங்காதலில்லவ
ளுண்டவில்லினுக்குறுகேடுசெய்வதின்
மண்டனிலுன்றனைமானுவாரிலை
கொண்டநின்குலத்தையுங்குமைத்துளாயென்றாள். (௪௬)

கவளவன்களிறனகார்த்தவீரிய
னவளையுமிருபத்தோரம்பிற்சாய்த்தனன்
குவளையுண்விழிப்புனல்கொழிப்பமண்ணிடைத்
துவளிடைமுரிதரச்சோர்ந்துவீழ்ந்தவள். (௪௭)

கணவனைநினைந்துதன்காதற்புத்திர
னணவுறுமளவுமாருயிரைத்தாங்கினா
டணவிராமனுந்தவநியல்பிற்சார்ந்தனன்
குணமுயரிருமுதுகுரவர்வாழிடம். (௪௮)

(வேறு.)

நீருமூணுமில்லாநெடும்பாக்கமு
மேருநீங்கியமேதினியுஞ்சுரர்
சாரும்வேந்தனிலாதசுதன்மையு
மோருமாதவச்சூழலொப்பாயதே. (௪௯)

வேதவோசையும்வேள்வியின்றாமமுங்
காதலாலடியார்கழல்போற்றிடப்
போதன்மீளலுநீங்கிப்புல்லென்றலா
லேதமென்கொலெனக்கவன்றெய்தினன். (௫0)

நாளிபட்டுநலியமறங்கிள
ராளிபட்டயிராங்கொழிந்தாலென
வாளிபட்டுமறிந்தபிதாவினைத்
தூளிபட்டமட்சூழலிற்கண்டனன். (௫௧)

ஈன்றதாயுமெறாழ்க்கணையேறுண்டு
மான்றுசோர்ந்துமறிந்ததுங்கண்டனன்
சான்றெனுங்குரவர்க்கிதுசாருமா
றேன்றுசெய்தவர்யாரென்றினைந்தனன். (௫௨)

அழுதுமோதியவனியில்வீழ்ந்தனன்
புழுதிமெய்த்தலம்போர்ப்பப்புரண்டன
னெழுதுசித்திரமென்னக்கிடந்தவர்த்
தொழுதுதுன்பத்தொடுகடன்மூழ்கினன். (௫௩)

கற்பகப்பொழிற்காவலனுந்தொழு
மற்புதத்தவவாற்றலும்வீறிய
கற்பினாற்றலும்யாங்குக்கரந்தன
பொற்பினாருயிர்போக்கவென்றேங்கினன். (௫௪)

புலம்பிச்சற்றுயிர்தாங்கிப்புணர்ந்தமை
யலம்பித்தாழ்புனற்கண்ணினளாகிய
நலம்பற்றுய்ப்புடைநண்ணித்தன்வான்கவான்
றலம்பற்றுகத்தலையெடுத்திட்டனன். (௫௫)

அன்னையோவெனையீன்றருளன்னையோ
வென்னையோநுமக்கிங்குற்றகாரியந்
தன்னையோதெனத்தன்கையினிவினன்
பொன்னையோட்டியபொற்பினளோதுவாள். (௫௬)

கார்த்தவீரியன்வேட்டைகழித்தபின்
பார்த்துவந்துபணிந்துவிருந்துதுய்த்
தார்த்ததேனுவுக்காரமர்செய்துடைந்
தோர்த்துவந்துயிர்கொன்றொழிந்தானரோ. (௫௭)

அன்னசெய்கைநினக்கறிவிப்பவே
யென்னதாவியிருவகைதாங்கினேன்
மன்னன்மூவெழுவாளிகளென்னுடற்
றுன்னவாங்கித்தொடுத்தனனுதலால். (௫அ)

(வேறு.)

மூவெழுமுறையுறமுடிகொண்மன்னரைப்
பூவெழுநாறுமுடல்புரளச்சாடுதி
நாவெழுமறையவர்நற்குலங்களே
தேவெழுகுலமெனச்சிறப்பச்செய்மதி. (௫௯)

(வேறு.)

எத்தாபதருமிகரில்லாவெழிலார்சீலத்திலிதுயர்ந்த
தெத்தாத்திரியன்றனைவிளித்துச்சிறப்பக்கிரியைமுடித்திடுக
புத்தாரமுதமுண்டாற்போற்புதல்வாநினைக்கண்டுளமகிழ்ந்தேன்
பத்தாவிடைச்செல்குவலென்றுபகர்ந்துதாங்குமுயிர்விடுத்தாள். (௬0)

உள்ளமுடைந்துதாய்மொழிந்தவுரைகள்செவியிலேறுதலுந்
துள்ளியெழுந்ததழற்கொழுந்தேதுணையமெவகுளிதலைக்கொள்ள
வெள்ளைவிழிகள்சிவப்பூரவிரிநீருலகுமெவ்வுலகு
மள்ளிவிழுங்குவோன்போலவழன்றுருளொன்றுறுத்தினன். (௬௧)

ஆற்றுந்தவத்துமறையோனாயரசனிறுத்தானெனுமிழிவை
மாற்றிமறையோர்தவவலியேவலியென்றுலகினிலைசிறுத்தக்
கூற்றமெனவென்குரவர்களைக்கொன்றகொடியோன்குலமன்றி
யேற்றமுறுமன்னவர்குலங்களெல்லாமறுப்பேனெனத்துணிந்தான். (௬௨)

அடுத்தவனத்திலுங்கிருக்தவருள்சேர்தெத்தாத்திரியனைப்போய்த்
தொடுத்தகருமமனைத்தினையுஞ்சொல்லிப்போதந்திருவருக்கு
மடுத்துமறையின்விதியாற்றுன்மறுமைக்கானகிரியையெலா
மெடுத்துப்புரிந்துவருநாளிலியைந்தைவந்நாந்தினத்தன்று. (௬௩)

கங்குற்பொழுதினித்திரையிற்கனவிற்கயவாய்க்குயவரியின்
வெங்கட்புலியொன்றுருத்தெழுந்துவிரைந்துபாயவாய்வெருவி
யங்கநடுங்கவிழிக்கின்றுனம்மாவம்மாவெனவிளித்தான்
றங்குமவனையீன்றெடுத்ததாயாகியநல்லிரேணுகைதான். (௬௪)

இடையேயழைத்தகாரணத்தாலிருண்டசுருண்டநெய்த்தொழுகித்
தொடையார்குழலும்வாணுதலுஞ்சுடர்விட்டிலகுங்குழைக்காதும்
படையார்விழியுங்குமிழ்மூக்கும்பவளவாயுமிவையுடைத்தாய்த்
தடையாதொளிருமுகமொன்றேதயங்கவெளியேதோற்றினள். (௬௫)

திருவார்வதனமெதிர்தோன்றத்தெத்தாத்திரியர்தாமுமறிந்
தொருவாவன்பினிராமனைப்பார்த்துனைப்பார்பதின்மூன்றுந்தினத்தில்
வெருவாதழைப்பதொழிந்திடையேவிளித்தாயதனாலிரேணுகையா
மருவார்தினக்குந்தாய்வதனமாங்குவெளித்தோற்றினளன்றே. (௬௬)

அதனாலொன்றுங்குற்றமில்லையாற்றுங்கருமமனைத்தினையு
மிதமார்தரநன்றுறச்செய்யினெல்லாவுருவுந்தகத்தோற்றி
மதமார்மணிநொஞ்ஞான்றும்வழிபாடாற்றுமணங்காயற்
புதமாயிந்தப்புவியிடத்தேபொருந்திவாழ்வாளெனக்கிளந்தார். (௬௭)

மற்றைத்தினமும்புரிவினைகள்வழுவாதாற்றிமுடித்திட்டா
ரற்றமகலப்பிரமனுலகடுத்துச்சமதக்கினியிருந்தான்
முற்றவுருவமெதிர்தோற்றிமுச்சீருலகம்பேரன்பிற்
பற்றிவணங்குந்தெய்வதமாய்ப்பயின்றுவாழ்ந்தாளிரேணுகையே. (௬௮)

சிறந்ததனதாச்சிரமத்திற்றெத்தாத்திரியன்சென்றிருந்தான்
விறந்தபடையினரசர்குலம்வேரோடறுப்பச்சூளுற்றான்
மறந்தங்கியவேல்விழியன்னைவருமாறுளத்துத்தியானித்தா
ணறந்தங்கியவன்னவனெதிரேயன்னைதோன்றியுநாசெய்வாள். (௬௯)

இராமனினதுமனத்தெண்ணமெய்த்தேனதனைமுடிப்பக்கே
ளராவுமதியுமுடிக்கணிந்தவழகர்கயிலைவரையடுத்துப்
பராவிப்பணிந்துதோத்திரங்கள்பண்ணியவர்மெய்யருள்கொண்டு
விராவுமரசர்குலமுழுதும்வீட்டாயென்றுகிளந்தொழிந்தாள். (௭௦)

மெய்ஞ்ஞைவளமும்வளமொழியமிழற்றுங்கிளவிச்செங்கனிவா
யஞ்ஞையுரைத்தமொழிதலைக்கொண்டலங்குங்கயிலைவரைநண்ணி
மஞ்ஞையுகைப்பான்றனையுயிர்த்தவரதன்றனையானவர்நஞ்ஞை
பிஞ்ஞையெனவேவழிமொழியும்பிரானைவணங்கித்துதிசெய்தான். (௭௧)

சங்கக்குழையின்வடிகாதர்தண்ணங்கருணைவிழிக்கடைதந்
தங்குற்றிறைஞ்சித்துதித்தானுக்காறக்கரமந்திரநவின்று
துங்கக்களிற்றின்முகத்திறைவன்றனைந்தாள்வணங்கியனுட்டித்தா
லிங்குற்றிடுநின்கருமமெலாமெளிதின்முடியுமெனவிடுத்தார். (௭௨)

மீளுமனத்தான்விமலரடிமீட்டும்வணங்கிவிடைகொண்டு
மாளுமுடலின்பயனுதவுமாயூரேசத்தலத்தெய்தி
யாளுமமலர்விநாயகனாரடித்தாமரைகள்பூசித்து
மூளும்விழைவிற்சடக்கரத்தைமுறையாற்கணித்துத்தவம்புரிந்தான். (௭௩)

செய்யுந்தவத்துக்குளமிரங்கித்திகழுமும்மதத்துக்களிற்றுமுகத்
தையன்பரசுமம்புயமுமலங்குமருப்புமோதகமுங்
கையிலணிந்துபூமாலைகவினவளைத்ததுளக்கையொடு
மெய்யன்விழியினெதிர்நின்றான்விண்ணோர்மலர்தூய்ச்சயசயென. (௭௪)

பொருக்கென்றெழுந்துகண்ணருவிபொழியவுமுவலன்புளத்தை
யுருக்கமிடறுதழுதழுப்பவுளைதள்ளாடவாணவத்தை
முருக்குங்கமலமலர்ப்பதத்தின்முறையின்வணங்கிவலஞ்சூழ்ந்து
செருக்கைக்களையுந்தெய்வமறைத்தேனைமாரியெனச்சொரிந்தான். (௭௫)

வேண்டும்வரங்கேளெனவிறைவர்விளம்பமகிழ்ந்திராமனெதிர்
மீண்டுவணங்கிக்கார்த்தவீரியனைவேந்தர்குலந்தோடு
மீண்டும்மருளாற்களைந்தொழிப்பவெறுந்தந்தருளவேண்டுமென
வாண்டபெருமான்றிருவருள்கூர்ந்தவனுக்கருளைவழங்குவார். (௭௬)

மாறுவலியுமழுப்படையுமரியாதிருக்குறித்தியமும்
பேறுவருமிமற்றவற்குப்பெயராப்பரசுராமனெனும்
வீறும்பெயருங்கொடுத்தடியர்மிக்கபிழைகள்விளைத்தாலுஞ்
சீறுதடிமைபுரியென்றுசெப்பிமறைந்தார்விநாயகனார். (௭௭)

மல்லற்கார்த்தவீரியனுமன்னரோடுமரசர்குல
மல்லற்படமோதறுத்தவர்களாண்டபுவிகளநதனைப்பாற்
செல்லக்கொடுத்துவெருளியினிற்றீர்ந்துதிராமித்தியனாய்ச்
சொல்லற்கரியபெருந்தவங்கடொடங்கியின்னுமிருக்கின்றான். (௭௮)

படியில்சமதக்கினிமைந்தன்பரசுராமனனுட்டித்து
முடிவில்வரங்கள்பெற்றிருந்தமுறைமைதொடுத்தாமறியவென
நெடியவுருவாய்ப்படியளந்தநிகரின்மாலாம்வியாதனுக்குக்
கடிகொள்கமலத்தவிசிருந்தசூராகக்கரத்தோன்மிகத்தெரித்தான். (௭௯)

அங்காரகனற்சதுர்த்தியொடுமெறுகுசமிமந்தாரமுமெய்த்
தங்காதரவினனுட்டித்தோர்தமையும்விளங்கத்தெரித்தனையால்
கங்காசுகவிற்படைச்சோமகாந்தாவின்னுஞ்சிலகாதை
யிங்காதரவிற்கேட்டியெனவியப்பும்பிருகுமாதவனே. (௮௦)

பரசுராமன் வரப்பெறுபடல முற்றியது,
ஆக படலம் எக-க்கு திருவிருத்தம் உஅஅநி.

# இராவணன்பூசித்தபடலம்.

விள்ளரும்பத்திபூண்டவியாதமாதவன்கைகூப்பித்
தெள்ளியவமுதம்போலத்தெவிட்டுதலில்லையென்றாய்
கள்ளவிழ்கடுக்கைவேணிக்கணபதிசரிதமின்னு
முள்ளனவுரைக்கவென்னவோதுவன்வேதநாவான். (௧)

விசும்பினையளந்துநின்றவெள்ளியங்கிரியினோர்சா
ரிசும்பினிலிலங்கைவேந்தனெய்திமாதவங்களாற்ற
வசும்பியதேனுந்தாதுமரிக்கணமரிக்குங்கொன்றை
பசும்புலோடணிந்தவேணிப்பரமனாரெதிரோநின்றார். (௨)

உட்டிகழன்புபொங்கவொய்யெனவெழுந்துதாழ்ந்து
தட்டமிட்டாடிப்பாடிச்சயசயபோற்றியென்று
கட்டுளிபனிப்பவென்புகரைந்துநெக்குடையநின்று
னெட்டினையிரட்டியோடுமியைந்தநாற்றோளினானே. (௩)

அலங்கலங்கொன்றைவேணியமலனாரவனைநோக்கி
நலங்கிளர்காதலென்னேநவிற்றுதிதருதுமென்றார்
துலங்கியகாலைத்தோளான்சுரரழிபதந்துனாயே
னிலங்கையங்கழியாவண்ணமினிதருள்சுரக்கவென்றான். (௪)

நட்கறைமிடற்றுச்செம்மலினிதருள்கூர்ந்தன்னான்கை
யருட்குறியொன்றுநல்கியந்நறும்பதியில்வைத்துத்
தெருட்குணத்தோடும்பூசைசெய்யிதுகொண்டுபோங்கால்
மருட்குணமகற்றியூர்திமாற்றியேசெல்லவேண்டும். (௫)

நெறியிடைவைப்பினிந்தநின்மலக்குறிபின்வாரா
தறியெனவருளினீங்கவரக்கன்கைத்தலத்திலேந்திச்
செறிதருவரையுங்கானுந்திகழ்பதிபலவுநீந்தி
யெறிதிரைக்கடலின்வைகுமிலங்கையிற்செல்லப்புக்கான். (௬)

அச்செயலறிந்தெந்தையான்றுமழிதராளிலங்கைமூதூ
ரிச்சிவலிங்கந்தன்னையிருத்திடினரக்கனென்று
முச்சகங்காக்கும்விண்ணின்முடிகெழுவேந்தனஞ்சிக்
கச்சமிலமரர்சூழக்கயிலைமால்வரையைச்சார்ந்தான். (௭)

மாகத்துமலர்ந்தகற்பமலர்நறுங்கந்தைபுக்கா
ராகத்துக்கழிவிலாதவமிழ்துமற்றனைத்துங்கொண்டு
நாகத்துமுகத்திறைவனாற்றடந்தோளிறைவனைப்
பாகத்தின்முதிர்ந்தகெஞ்சாற்பயன்பெறப்பூசித்தானே. (௮)

இந்திராவேட்டதென்னென்றிறையவர்வினவவன்றான்
வந்திராவணன்மானேந்திமலர்க்கரத்திலிங்கம்வாங்கி
யந்தில்வானிலங்கைநாட்டவாற்றிடைச்செல்லாநின்றான்
முந்தியாங்குறுமுறைமுமுடிந்தெமைக்காக்கவென்றான். (௯)

வருணனையிலங்கைமன்னன்வயிற்றுணீர்சுரப்பியென்று
கருணையினேவியன்னான்கற்பித்தபடியேசெய்யத்
தருணமெய்ஞானமுந்துறங்கியமறைச்சிறானா
யருணமென்கமலபாதமவனிநோய்தரமுன்சென்றான். (௧௦)

உளைதருவயிற்றினோடுமுறுமிராவணனும்வீரன்
களைகணுமிறைவன்சொன்னகடப்பாடுகடவான்சூழ்ச்சி
விளைவையோராதுமுன்னேமேவியமறைச்சிறாற்குத்
தளைபடுமன்பாலின்சொற்சாற்றிமற்றிதனைச்சொல்வான். (௧௧)

நீர்மிகுந்தகட்டைவாட்டிநெடுந்துயர்ப்படுத்தாநின்ற
தூர்மிகுதூரத்துள்ளதொருவரும்வேறுகாணேன்
சீர்மிகுசிவலிங்கத்தைச்செங்கையிற்றாங்குநான்போ
யேர்மிகுசோயந்தொட்டிங்கெய்திடும்வரையுமென்றான். (௧௨)

மெல்லியவாக்கையேனுன்விழுச்சிவலிங்கந்தாங்கும்
வல்லமையுடையேனல்லேன்வலிதினீதருதிதந்தா
னல்லதேமுக்காற்கூவநண்ணிடாயாயின்மண்மேற்
செல்லுறவிடுப்பலென்றுன்றேவர்கடேவதேவன். (௧௩)

அப்படியாகவென்றேயங்கையிற்கொடுத்துச்சென்று
துப்புடையரக்கனன்னீர்தொடுமுனைமுக்காற்கூவி
யொப்பிலானிலத்திலிட்டானுற்றவனேக்கிவல்லே
கைப்பெருவலைகடம்மாற்கல்லிபங்கெடுக்கலுற்றுன். (௧௪)

நெடியவனேடநீண்டநிமலனூர்பாதமேபோற்
படிமுழுதுருவச்சென்றுபார்நயப்பேதுங்கொள்ளாக்
கடியவிழ்மலர்மென்கூந்தற்கற்பினருள்ளம்போலத்
தொடிபொலிதடக்கைவாட்டிச்சுடர்ந்ததவ்விலிங்கமம்மா. (௧௫)

இருபதுகரங்களானுமெடுத்திடமுயன்றபோதங்
கருவெனவுருவமென்னவமர்ந்திடுமமலனூர்தந்
திருவுருப்பசுவின்காதிற்றிகழ்தலாற்செறிந்தமண்ணுங்
குருமலர்க்காவிடேனுடுகோகன்னமென்றுகூறும். (௧௬)

வலிமிகுமரக்கனேக்கிமாபெலமென்றனந்த
நலிவறுசிவலிங்கந்தானன்னுமப்பெயர்பூண்டன்று
கலிகெழுவெகுளிமூளக்கையினுற்குட்டியிட்டா
னொலிகெழுமறைச்சிறுன்போலுற்றநாயகனைமன்னே. (௧௭)

குட்டலுமறைச்சிறுன்போற்குறுகியாதன்வல்லே
யட்டுமும்மதமால்யானையானனனுகிவின்ணனின்
முட்டவொள்ளொளியான்மோலிமுதிர்ந்தபேருருவுகொண்டு
சட்டவல்லரக்கன்றன்னைத்தடங்கைப்பந்தாடினனே. (௧௮)

அண்டமும்பொதிர்க்கும்வண்ணமணிமுடிமுடிகடாக்க
விண்டலமுருவச்சென்றுமீண்டடித்துணையானீர்சூழ்
மண்டலம்பொதிர்ப்பவீழ்ந்துமறிந்தும்வல்லுடலிற்சாலக்
கொண்டபல்லென்புநெக்குக்குலைதரமறுகினுனே. (௧௯)

பொய்தவிரடியார்செய்யும்புன்மையும்பொறுப்பாயோலங்
கைதவமனத்தார்செய்யுங்கடப்பாடும்வெறுப்பாயோலஞ்
செய்தவென்பிழையுங்காத்துத்திருவருள்செறிப்பாயோலம்
வெய்தருள்புரியாயாகின்விளிகுவேனேலமென்றுன். (௨௦)

கடைமடைதிறந்தாலன்னகருணைகட்கடையிற்காட்டி
யிடையுடலொழியாவண்ணமெம்பிரானுய்யவிட்டா
னுடையவன்பாதப்போதிலுறுமலராதிகொண்டு
தடையறுமன்பிற்பூசைசமைத்தனனரக்கர்கோமான். (௨௧)

என்னுடைமத்தகத்திலிருங்கையிற்றுக்கியாங்கு
நின்னுடைமத்தகத்தின்றேரேலெனப்புடைக்கவென்றான்
பொன்னுடையவனுங்காணப்பூரணனவன்றன்கையாற்
றன்னுடைமத்தகத்திற்றுக்கினனுதிரஞ்சோர. (௨௨)

இம்முறையாவராகவிருங்கையான்மத்தகத்தி
னம்மெதிர்புடைத்துச்செல்லுநன்னமையையுடையராயிற்
றொம்மெனவவர்க்குத்துன்பங்கோளெலாமகற்றிச்செல்வம்
விம்முறக்கொடுத்துமென்றுவிநாயகரருளிப்போனார். (௨௩)

அராவணிசடையெம்மண்ணலருளியவரங்கள்கொண்டே
யிராவணனிலங்கையெய்தியின்புறவாழ்ந்தானிப்பா
லிராவணக்கடலையுண்டவிருடிபூசித்தவாறும்
பராவணவுரைப்பக்கேட்டியெனச்சொலும்பதுமச்செல்வன். (௨௪)

இராவணன் பூசித்தபடல முற்றியது,
ஆக படலம் எ௨-க்கு திருவிருத்தம் ௨௬௦௬.

# அகத்தியர் பூசித்தபடலம்.

தானுவால்வரஞ்சாரந்தசூரனுற்-பேணுவானகப்பெயர்ந்தவச்சிரன்
பூணுமாறொடுபோந்துமண்ணின்மேல்-வேணுமாநகர்மேவியிலிகினான். (௧)

தண்ணிலாமுடிச்சடையிற்கங்கைபா-யண்ணலாரடிபலர்சொரிந்திட
வண்ணநந்தனவனமுநாணுமா-றெண்ணிலாமலரிலையுநட்டனன். (௨)

அலரினோடுபாசடையுங்கொய்தடி-மலரின்வைகலுமலரினுஞ்சொரிந்
திலகுபூசனையியற்றியும்பரா-ரூலகமாள்பவனுவந்துவாழுநாள். (௩)

குருறுந்துமச்சூரனாணையாற்-காருறுந்துநீர்கதுவலின்மையாற்
சிருறுந்தியதேமலர்ப்பொழில்-போருறுத்தவர்புரங்களேபோன்றவே. (௪)

என்செய்வாமெனவிறைவனேங்கலு-மின்செய்வான்மொழிவிமலனாணையாற்
கொன்செய்மாநதிகுறுகுமஞ்சலை-நின்செய்பூசனைநிரப்பவென்றதே. (௫)

இந்திரன்மகிழ்ந்திருக்கும்வேலையில்-வந்துதோன்றினன்மருவினாரத
னந்தமாதவனடியிற்றாழ்ந்துமெய்-யுந்துமன்பினுலுரைக்குவேந்தனே. (௬)

கரந்துவைகுநான்காழிநாதனை-யரந்தைதீர்தரவருச்சித்துய்வதற்
குரந்தழைத்தவுய்யானம்வைத்துளேன்-சுரந்துவான்மழைசொரிதலற்றதே. (௭)

கணவனீங்கியகற்பினரென-மணமரும்பியமலராரும்பொடு
துணர்தளிர்க்குலஞ்சோர்ந்துவாடின-வுணவுநீர்பெறுமுபாயங்கூறென்றான். (௮)

ஆடகத்தவானரசன்வேண்டலு-மாடகத்தியாழ்மலர்க்கரத்தினான்
றேடகத்தபூந்துடைவையுய்யுமா-நாடகத்தொடுநன்றுகூறுவான். (௯)

(வேறு.)

அந்திவான்மதிசடைக்கணிந்தம்பலத்தாடு
மெந்தைநாயகன்கயிலையிலிருந்தகாவிரியா
முந்தியாற்றினையுதவிடக்குண்டிகையேற்று
வந்துசையமால்வரையிருந்தனன்குறுமுனிவன். (௧௰)

தீந்தமிழ்க்குறுமுனிவரன்றெய்வதக்கரகத்
தேந்துவானதியிங்குறினினைந்தலர்ந்துய்யும்
பூந்தண்வார்பொழிலன்னதுபுரிதரவல்லான்
சாந்தயோகினருளத்தமர்நந்திமாமுகனே. (௧௧)

ஒன்றையாக்கிடவொன்றினையழிக்கவொன்றனைவிட்
டொன்றைவேறுறவுயர்த்தவும்வல்லவனுவனே
யொன்றுமேனையோர்க்கரியவாதலினுவனடியே
யொன்றுகாதலின்வழிபடுகெனவுரைத்தொழிந்தான். (௧௨)

பாயிரங்குநீர்ச்சடைமுடிப்பரமனைச்சேய்க்குந்
தாயிரங்கியாங்கடியர்பாற்றழைந்தபேரருளாற்
போயிரங்கிடார்போய்கிடும்புழைக்கைமாமுகனை
யாயிரங்களனன்பிற்றாற்பூசையாற்றினனால். (௧௩)

எம்பிரானெதிர்நின்றடியிறைஞ்சியேத்தெடுந்த
வும்பர்கோனிடையொள்ளியதிருவருள்வழங்கி
நம்பியாதரவாலுளநாடியபொருளாக்
கம்பியாதுரையென்றனன்காவலனுரைப்பான். (௧௪)

பிணரினீள்பெருப்புழைக்கரக்களிற்றினைப்பிடிநேர்
வணரினீள்குழன்மலைமகள்வெருவமுன்னுரித்தாற்
கிணரினீள்மலரிடப்பொழிலியற்றினனதனா
ஞணரினீண்டுளர்பவப்பிணியின்றியேயுணங்கும். (௧௫)

சையமால்வரைத்தமிழ்முனிசார்ந்தனனவன்செங்
கையினேந்தியகுண்டிகைக்காவிரிநதியை
வையமேத்தவிங்குறும்வகைவழங்குதியென்று
ஐயனாரருளாலதுபுரிதுமென்றகன்றார். (௧௬)

கொடியுருக்கொடுகுன்றிடைப்படர்ந்துகுண்டிகையி
னடிமிதித்திருந்தகத்தியன்விழிவெறியாமே
கடிமலர்க்கையிற்கடிந்திடக்கரகநீர்கவிழ்த்துப்
படியின்மாமறைச்சிறுவனெனநின்றனன்பகவன். (௧௭)

கும்பமாமுனிநோக்கினன்கொடியுருக்கொண்டு
வம்புநீடியகரகநீர்கவிழ்த்தனன்மற்றுப்
பம்புவேதியனெனவெதிர்ப்பயின்றனனிவன்றான்
வெம்புகானவனோபிறனோவெனவெகுண்டு. (௧௮)

இவன்வலித்திறமுழுவதுமறிதுமென்றெண்ணி
யவனிருந்தலையோச்சுவானங்குலிமடித்துத்
தவவிருங்கையுமோங்கியேயண்மையிற்சார்ந்தா
னுவமையில்லவனஞ்சினான்போன்றொழிகின்றான். (௧௯)

எட்டுவானெனக்கிட்டுவனிருடிகையபுசத்துப்
பட்டிடான்மிகச்சேணிடைப்படர்குவனிவ்வா
றெட்டுதோறும்விட்டகன்றுலகெலாந்திரிந்தான்
சட்டமாதவனுளத்தொடுந்தாள்களுந்தளர்ந்தான். (௨௦)

அற்றசிரடியார்க்கலாலகப்படாவிறைவன்
முற்றுமாதவக்குறுமுனிமுழுவதுந்தளர்ந்த
பெற்றியோர்ந்தனன்சிறனெனுமுருவினிற்பெயர்வுற்
றெற்றைவார்மருப்பியமுகத்தொருவனாய்நின்றான். (௨௧)

குட்டவோங்குதன்கரங்களைக்கொண்டுதன்முடியி
னட்டுசோரியிற்சேப்புறவழுந்துறப்புடைப்ப
முட்டிலாதமெய்யன்புடைமுனிவனைநோக்கி
யிட்டமாயதிச்செயலினிநில்லென்றானிறைவன். (௨௨)

மடத்திற்றீர்ந்தமெய்ம்முனிவநின்மனத்துறுவிழைவெம்
மிடத்திற்கோடியென்றலுமிறையவன்பணிந்தியம்பு
நடத்தினாயகனளித்தருணறும்புனன்முழுதுங்
கடத்திற்றீர்தரக்கவிழ்த்தனைகடவுளரேறே. (௨௩)

முனைவனேவலாற்பொதியமால்வரையினைமுதல்வ
துனையநாடியேசெல்கின்றேனச்சுடர்வரையி
லனையநாதனையாட்டியாராதனைபுரிய
வினையகாவிரிநதியெனக்கீகவென்றிரந்தான். (௨௪)

செந்தமிழ்க்கொருமுதல்வனேதேவர்கள்வேந்தன்
வந்திறைக்கலர்வனம்வகுத்தானறலின்றி
வெந்துநின்றதவ்விரிபொழில்காத்திடவேண்டி
யுந்திதன்னையிங்கொழுகுறக்கவிழ்த்தனமுணராய். (௨௫)

நினதுகுண்டிகைவயிற்றையுநிரப்புதுமென்றா
வனகனவ்வயினொழுகியவாற்றிரும்புனலின்
றனதிருங்கையினள்ளியந்தடங்கடத்தமைவன்
மனமகிழ்ச்சியின்வழிதரமடுத்தருளினால். (௨௬)

மற்றும்வேண்டியவரங்களும்வள்ளலாரருளிப்
பற்றலார்புரமழித்தருள்பரமனார்பயிலுங்
கற்றைநீளொளிக்கயிலையையடுத்தனர்முனியும்
பெற்றதீர்த்தமோடெய்திவாழ்ந்தனன்பெரும்பொதியம். (௨௭)

காவிரிப்பெருநதிப்புனல்கணேசர்தம்மருளான்
மாவிரைத்தெழும்லர்முதல்வளமெலாமுந்திப்
பூவிரைப்பொழில்புகுத்துவான்புரவலன்மகிழத்
தாவிரைப்பறுத்தொடுகடல்புகுந்ததுமேனுள். (உஅ)

இறைவிநாயகனேவலாலெய்துமப்பொன்னி
முறைவழாவகைகாலத்தின்முன்னுவதெனினந்
நிறையுமாரருணின்மலக்கணேசனாருளுங்
குறையுமோவவன்குரைகழல்கூடுமெய்யினர்க்கே. (உகூ)

குறியமாதவன்பூசித்தசெயல்குறித்துரைத்தா
னெறியினீடியகாசிபவிகழ்தரவுயிர்த்த
மறிதராதமெய்யன்புடையாரெலாம்வழுத்துஞ்
செறிவுமோரெனவியாதனுக்குரைக்குந்தேமலரோன். (௩0)

அகத்தியர் பூசித்தபடல முற்றியது.
ஆக படலம் எ௩-க்கு திருவிருத்தம்-உகூ௩௯.

# காசிபர்முதலியோரனுட்டித்தபடலம்.

முன்னொருபிரளயமுடிந்தசெவ்வியின்
மன்னவேழ்மைந்தனைமனத்திற்றோற்றினே
னன்னவர்தங்களுளறிவுமேன்மையுந்
துன்னினன்காசிபனென்னுந்தோன்றலே. (க)

உணர்பவருணர்வினுளுணர்வதாகிய
கணபதிக்குரியவேகாக்கரந்தனைத்
தணவரும்பத்திமைதழைத்தகாசிபற்
கணவுறுமுறைமையாலருளினல்கினேன். (உ)

கணித்திடுமுறைமையுங்காட்டிநஞ்சுமிழ்
பணித்தொடைமிலைச்சியபரமன்றாளிணைக்
கணித்துறுபத்தியினமர்ந்திட்டைம்பொறி
தணித்துயர்தவத்திடைச்சாரச்செப்பினேன். (௩)

ஆங்கவனருளினாலாருயிர்த்தொகை
பாங்குறப்படையெனப்பணித்துவிட்டனன்
றாங்கியின்னருளினைத்தக்ககாசிப
னீங்கினனருந்தவநெடிதுழந்தனன். (௪)

இமையவராண்டொராயிரமிறந்தபி
னமைவனுக்கருள்செயவன்பின்மெய்த்தவர்
தமையருங்கதியிடைச்சார்த்தும்பேரரு
ளுமைமகனுகுவையூர்ந்தங்கெய்தினன். (௫)

